உ சிவ மயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

நல் நிலம், ஸ்ரீ தாண்டவ ராய சுவாமிகள் இயற்றிய

# கைவல்ய நவநீத

நூலுக்கு,

காவிலூர் மடம், சிதம்பரம், ஸ்ரீ பொன்னம்பல ஞான தசிக ஸ்வாமிகள் இயற்றிய, தத்துவார்த்த தீபிகை உரை, உதாரணக் கவி 233-க்கு,





திருப்பூவணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# ஆதித்தன்

என்னும் உரை, இது,

மேற்படி ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகளால்

மதுரை

அஜந்தா பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

விலை ரூ. 2—50]　　1964　　[காபிரைட்.

இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம், வேதாந்த மடம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், இயற்றிய நூல்கள், பதிப்பித்தன.

ஹிந்தி மொழி பெயர்ப்பு.

1. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம். 2—50
2. விசார சாகரம். வசநம் 2—25

சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு

3. கதா சரித் சாகரம், வசநம் கதை. 2—25
4. ஹரிமீடே, ஹரி தத்வ முக்தாவலி. பத உரை. 0—75
5. வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். 0—50
6. நைஷ்க் கர்மிய சித்தி. வசநம். 0—50
7. வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். 0—50
8. ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். 0—50
9. பகவற் கீதை 15-வது அத்யாயம் பத உரை. [தமிழ் கவி உரை
10. மூர்க்க சதகம், பத உரை. [நிர்க்குண அஷ்டோத்ர சத நாமாவலி. 0—50
11. வேதாந்த பரிபாஷை. வசநம். 0—44
12. மண்டல பிராஹ்மண உபநிஷத் [ராஜ யோக பாஷ்யம். வசநம். 0—25
13. ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம். வசநம். 0—25
14. வேதாந்த சஞ்ஞா—வசநம். 0—13

உரை நூல்

1. நாநா ஜீவ வாதக் கட்டளை, [சத்யார்த்தப் பிரகாசிகை உரை. 2—00
2. கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை, உரை. 2—00
3. மேற்படி நக்ஷத்திர விளக்க உரை. 0—25
4. சசி வந்ந போதம் பதார்த்த பாஸ்கரன் உரை. 2—00
5. மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை. 2—00
6. பக்தி (வைராக்ய) சதக-பத உரை பொழிப் புரை. 1—50
7. மேற்படி உரை உதாரணக் கவி பக்தி ரச உரை. 1—00
8. வைராக்கிய தீப பத உரை பொழிப் புரை. 0—50
9. மேற்படி உரை உதாரணக் கவி, சுடர் உரை. 1—00
10. சீடாசாரம்-பால போதிநி உரை. 0—50

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம :

கைவல்ய நவநீத நூற்கு,

சிதம்பரம், ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிகர் அவர்கள்

இயற்றிய, தத்துவார்த்த தீபிகை உரையின்

உதாரணக் கவி (233)க்கு,

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகள்

இயற்றிய, ஆதித்தன் உரை.

இது

திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்

மதுரை,

அஜந்தா பிரசில் பதிப்பிக்கப்பட்டது.

விலை ரு 2-50) 1 9 6 4 (காப்பிரைட்

## பாயிரம்.

அரியதாங் கைவல்யநவ நீதம்எனும் நூறுக்கு
அணிந்தனர்கூ டார்த்ததீ பிகையை நன்ருய்,
பெரியபொன்னம் பலஞாந தேசிகர்தான் அதற்குப்
பெரியஉதா ரணமிருநூ றுமுப்ப துமூன்றும்,
உரியதாக் கொடுத்தகவி களுக்கும்உரை உரைத்தார்
உளந்தெளிய ஆதித்தன் பெயர்பூண்ட உரையை,
மருவரிய பூவணத்துக் காசிகா நந்தன்
மாணவர்மேல் அன்புகொண்டு மலர்ந்தனனன்
மாதோ.

## பூமிகை.

சோழ வள நாட்டில், திரு வாரூர் சமீபம் உள்ள நல் நிலத்தில், சமாதி கொண் டெழுந்தருளியிருக்கும், தாண்டவ ராய சுவாமிகள் 288 செய்யுளில், இரு படலத்தில், கைவல்ய நவநீதம் என ஒரு நூல் செய்தார்கள் அதற்கு, பதி னைந்து பெயர். பதி னைந்து உரை இயற்றினுர்கள்.

அவற்றுள், சிதம்பரம் பொன்னம்பல ஞான தேசிகர் அவர்கள் தத்துவார்த்த தீபிகை என ஒரு உரை செய்து, அதற்கு மேற்கோளாக 28 நூலி லிருந்து 233 கவி காட்டியிருக்கிருர்கள்.

அதனைப் படிப்போர் உளந் தெளியும்படி, திருப்பூ வணம், வேதாந்த மடம், காசிகாநந்த ஞாநாச் சார்ய ஸ்வாமிகள், நூற்களையும், செய்யுட்களையும், சிரமங்கருதாது தெரிந்து, தெளிந்து அதற்கு, ஓர் உரை 1935 ஆதித்தன் எனப் பெயர் கொடுத்து எழுதியிருக்கின்ருர்கள் நவநீதத்தில் உள்ள தத்துவத்தை விளக்கியவுடன், ஆதித்தன் உரை ரஸ்மியால் வேகச்செய்து சுவை மிகப்படுத்திப் புசிக்கும் மாணவருக்கு அளிப்பது என்பது பொருளாம் இதனை, யாவரும் வாங்கிப் படித்து, கைவல்யத்தை எளிதில் அடையும்படி விரும்புகின்றனம். சுபம் அஸ்து.

**திருப்பூ வணம், காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.**



## உதாரண நூற் பெயர் அகராதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அஞ்ஞ வதைப் பரணி | 4 | 21 | நன் னூல் | 1 |
| 2 | அத்துவித வுண்மை | 1 | 22 | பகவற் கீதை | 19 |
| 3 | அமிர்த சாரம் | 1 | 23 | பஞ்ச தசி | 6 |
| 4 | ஈசுர கீதை | 7 | 24 | பட்டிநத்துப் பிள்ளையார் பாடல் | 1 |
| 5 | கந்த ரநுபூதி | 1 | 25 | பாகவதம் | 14 |
| 6 | சசி வந்ந போதம் | 1 | 26 | பாடு துறை | 2 |
| 7 | சாங்கு சித்கர் | 1 | 27 | பிரபு லிங்க லீலை | 4 |
| 8 | சூத்த சாதகம் | 1 | 28 | பிரஹ்ம கீதை | 33 |
| 9 | சுருதி | 1 | 29 | பெருந் திரட்டு | 1 |
| 10 | சுவா நுபவத் திரு வாக்கு | 1 | 30 | ரிபு கீதை | 1 |
| 11 | சொரூபா நந்த உபநிடதம் | 1 | 31 | லக்ஷணவிருத்தி | 1 |
| 12 | ஸ்மிருதி | 2 | 32 | வள்ளலார் | 1 |
| 13 | திருக் கழு மல மும் மணிக் கோவை | 1 | 33 | வாசிட்டம் | 100 |
| 14 | திரு மந்திரம் | 5 | 34 | விவேக சூடாமணி | 2 |
| 15 | திரு வள்ளுவர் | 2 | 35 | வேதாந்த சூடாமணி | 9 |
| 16 | திரு வாசகம் | 1 | | ஆக உதாரணச் செய்யுள் தொகை | 233 |
| 17 | திரு வாய் மொழி | 3 | | | |
| 18 | திரு விடை மரு தூர் மும் மணிக் கோவை | 1 | | | |
| 19 | தேவாரம் (அப்பர்) | 2 | | | |
| 20 | தேவாரம் (சம்பந்தர்) | 1 | | | |

# கைவல்ய நவநீதம், உதாரணச் செய்யுட்களின் முதற் குறிப் பகராதி.

(1) அஞ்சு வதைப் பரணி 4

9 ஆல் 4 இரையு மெமு
12 லீலை 7 தன்பரா பரம
14 குறி 8 தெருளு ருங்கலை
26 களங் 6 நெய்விட்ட கருங்

(2) அந்துவித வுண்மை 1

1 மேலாஞ் சதுட்ட

(3) அமிர்த சாரம் 1

24 ஊர்வ பதினென்

அத் (4) ஈசுவ கீதை 7

6 25 இல்லை யில்லையென்
6 20 உற்பவ சராசர
2 51 எங்குந் தானாய்
7 16 ஒத்த முக குணங்
7 16 சத்துவ ஞானமாம்
2 53 சுத்தனு யொன்று
7 6 மாயைபல பண்ணு

(5) கந்த ரநுபூதி 1

39 மூவேடணை என்று

(6) சசி வங்க போதம் 1

7 மலமேவிய தீவினை

(7) சாங்கு சித்தர் 1

கருப்பைக்குண்

(8) சூத்த சாதகம் 1

26 சூக்குமந் தனது

(9) சுருதி 1

ந்ாபுக்தம் க்ஷீயதே கர்ம

(10) சுவாநுபவத் திரு வாக்கு 1

முக்தி 142 காண்பானுங் காண்பவை

(11) சொருபாநந்த உபநிடதம் 1

30 மாருத வஞ்ஞாந



(12) ஸ்மிருதி

ஸ_ாஹண :

ப_ாவயெத்

(13) திருக் கழுமல மும் மணிக் கோவை 1

10 எந்தை நின் றிருவளர்

(14) திரு மந்திரம் 5

7 சமாதி 1 அந்தமில் ஞானிதன்
7 சமாதி 4 அந்தமில் ஞானி யருளை
7 சமாதி 2 எண்ணிலா ஞானி
8 நின்ம 15 தன்னை யறிவ தறிவாம்
7 சமாதி 3 புண்ணிய மாமவர்

(15) திரு வள்ளுவர் 2

18 வெஃ 1 குடிபொன்றிக்
3 நீத் 9 குணமென்னுங்

(16) திரு வாசகம் 1

குலாப் 3 துவந்துவங்க டூய்மை

(17) திரு வாய் மொழி 3

முதற் பத்து 3ல், 6. உணர்ந்துணர்ந்
7. ஒன்றெனப்
மூன்றும் பத்து 10ல், 6. துயரில் சுடரொளி

(18) திரு விடை மருதூர் மும் மணிக் கோவை 1

16 பொருதிடங் கொண்ட

(19) பொது (அப்பர்) தேவாரம் 2

திருவங் 11 இறுமாந் திருப்பன்
குறுந் 10 விறகிற் றீயினன்

(20) திருப் பிரம புரம் (சம்பந்தர்) தேவாரம் 1

(திரு வெழுக் கூற்)
படைத் தளித் தழிப்ப

(21) நன் னூல் 1

2 சொல்-பொது } 7 ஒருமொழி யொழி

(22) பகவற் கீதை 19

8–6 இந்த வுடலம்

| | | |
|---|---|---|
| 18 | 38 | உழுதொழில் |
| 2 | 23 | ஊறுபட |
| 9 | 20 | எப்பொருள் |
| 4 | 28 | எறியா வெரி |
| 14 | 9 | ஓது ராகவு ரு |
| 18 | 36 | கறைசெ யைம் |
| 3 | 12 | காதலா லரசன் |
| 2 | 57 | காதலின் ஞாநி |
| 14 | 10 | குறியு நீல |
| 2 | 51 | குறையுமாப் |
| 14 | 7 | சத்துவம் |
| 4 | 7 | சாவாது பிற |
| 18 | 37 | தலைமையுங் |
| 18 | 39 | தீராவகை |
| 4 | 4 | நல்ல காதல் |
| 14 | 8 | பற்று மாசின்மை |
| 6 | 16 | யாதொன் றினைப் |
| 14 | 12 | வாமுஞ் சத்துவம் |

(23) பஞ்ச தசி. 6

| | | |
|---|---|---|
| 1 தத்து | 6 | அறிவது விட |
| 1 ஷை | 4 | இன்னதாங் |
| 1 ஷை | 3 | ஒலியொடு ருதி |
| 1 ஷை | 5 | துயின்றெழுந் |
| 2 பஞ்ச | 31 | பிரமத்தோ ரிடத் |
| 1 தத்து | 7 | பேதமாய்ச் சென் |

(24) பட்டினத்துப் பிள்ளையார் பாடல். 1

| | | |
|---|---|---|
| கைலா | 7 | மந்திக் குருளையொ |

(25) பாகவதம். 14

| | | | |
|---|---|---|---|
| 4 | 5 | 12 | அயமகத்தினில் |
| 11 | 4 | 3 | உறைந்தநூற் சிலம்பி |
| 11 | 2 | 20 | குலவு மூவருரு |
| 11 | 6 | 11 | சாற்றிய குணமு |
| 7 | 2 | 68 | சொன்ன புந்தியிற் |



| | | | |
|---|---|---|---|
| 11 | 4 | 2 | தரைபுனல் கனல் |
| 4 | 5 | 13 | படுத்திடு மறிகள் |
| 4 | 5 | 79 | பண்ணவ னகல |
| 10 | 50 | 11 | புனிதமற் றுன்னை |
| 4 | 5 | 54 | மகமி யற்றுழி |
| 11 | 4 | 45 | மடல்விரிந்த |
| 11 | 11 | 9 | மாநுட வாக்கை |
| 11 | 4 | 44 | வாக்கினைக்கடந் |
| 3 | 8 | 27 | விழைவெ னப்படு |

(26) பாடு துறை. 2

| | | |
|---|---|---|
| 70 வாழ்க் | 1 | தன்னிலேயெல் |
| 56 அக்கை | 1 | பிணஞ்சுடு |

(27) பிரபு லிங்க லீலை. 4

| | | |
|---|---|---|
| 12 முத்தா | 9 | அழிவிலானை |
| ஷை ஷை | 11 | ஒண்டரைக்கண் |
| ஷை ஷை | 10 | சச்சிதாநந்த சங்கர |
| 24 மனோ | 15 | வாநமல்லேன் |

(28) பிரஹ்ம கீதை. 33

| | | |
|---|---|---|
| 8 | 24 | அணுவினுக் கணுவு |
| 5 | 137 | அருளிநு லியாவன் |
| 4 | 15 | அவிச்சை விச்சை |
| 3 | 22 | அன்னியமாய் விஞ் |
| 8 | 19 | இந்தப் புரங்க |
| 12 | 20 | இந்தவி டும்பை |
| 4 | 59 | ஈசனு ஞாநியி ருந் |
| 12 | 17 | ஈசனிங்கருள் |
| 12 | 21 | உண்டுபோற் ரேன்று |
| 3 | 30 | உருத்திரன்மான் முத |
| 12 | 2 | உரையாடு கின்ற |
| 12 | 22 | காட்சியை யெல்லாம் |
| 10 | 12 | காண்டல் கேட்டல் |
| 5 | 36 | காலமுங் கன்மந்தா |
| 3 | 23 | சச்சிதாநந்த மாகி |
| 10 | 13 | சித்த மத்த மித்திடத் |
| 8 | 18 | சீவனன்று புரமூன் |
| 6 | 6 | சுழலும்வினை |

4 24 செப்புநா மத்தா
4 23 தத்துவ ஞாநி காணி
4 11 தர்க்க மானந் தாஞெ
5 38 தன்மாத் திரைக ளீந்
8 4 திருமாம ருத்தத்தி
8 20 நுண்மை யாமதி னுண்மை
3 29 பருதிநெஞ்சினுமொ
11 16 புருட னென்றுரை
10 24 மாய வன்புலத் தெழா
12 22 மாரிபோன்
3 21 யாதொன் றெலும்பு
5 136 யாவ ஞெருவன் ற
11 17 வாக்கது மநத்திடை
4 7 வாக்கு மனங்கண்
4 6 வாக்கு மனமு

## (29) பெருந் திரட்டு. 1

முகவுரை 1 தந்தை தாயு மெய்த்

## (30) ரிபு கீதை. 1

28 அந் 15 தேகமுத ஞனென்னல்

## (31) லக்ஷுணவிருத்தி. 1

9 ஞாநமுதித் ததன்பின்

## (32) வள்ள லார். 1

8அதிரக49 நித்தனன் றுரைத்த

## (33) வாசிட்டம். 100

6 மானு22 அகங்காரத் துருவாம்
5 சன 12 அகமகமென் றனைத்து
6 விரத 13 அகலரசு மிடிகளு
6 புசு 21 அகல்வா தனையின்
3 இத 37 அடக்கமா யுரைத்தேம்
6இக்ஷு29 அதுதா னறியார்க கிடர்
5காதி 24 அதுலமா தவனேர்



5 மாவ 31 அந்த மந்திரி யந்த
5 சன 10 அறிவானு மற்றி
4தாசூ 104 அறிவெனும் விதைசங்
3 இத 48 அறைந்த த மைந்தாலும்
6இக்ஷு58 அன்னுன் சமமாம்
5 வீத 27 இதுவெனத் தோன்றிய
6இக்ஷு31 இதுவே நன்றிதன் றென்னு
3 ஞாந 11 இந்தச் சகநீ நான்
6 சிகி 143 இந்த வடிவா மெனக்கோர்
4 தாசூ 14 இம்மொழிகளா லிமைப்போதி
ஷெ ஷெ 12 இயற்கை குணஞ் சோதித்
6 பகீ 32 இருப்புழி மௌநம்
1வைரா10 சிறப்பிலா விந்த
6இக்ஷு64 ஈனமான வகம்பாவ
6 சிகி 158 உரையென மன்னவன்

6 சிகி 95 உலகமெலாம் பிரமமெனும்
6 இத 8 உவக்கும் வீடே
6 சிகி 65 ஊன்றுறவொன் றைக்
3 மனத் 4 எங்கே யெனினுந்
5 சுரகு 23 எத்தனை யெத்தனை
5 சுரகு 16 எல்லா மென்றுரைத்த
6 இத 9 எறியுங்கடலினு
5 மாவ 47 என்னு வெள்ளி
5 சுரகு 19 ஐயம்போ லரந்தை யுண்
6இக்ஷு42 ஒன்றி லனுகேனுன்
5 இத 8 ஒன்று மருவு முருவு
4 கசன் 19 கசனுபர் சமாதி
4 வீம 13 கரசர ணுதிமட்டா
ஷெ ஷெ ஷெ ஷெ
5 சுரகு 27 கரண மீரைந்து



கணபதி துணை

# கைவல்லிய நவநீதத்தின்

உதாரணச் செய்யுட்களின் ஆகித்தன் உரை.

பாயிரம்–1. பொன்னில மாத ராசை.

## 1. தத்துவ விளக்கப் படலம்.

### ஞாந வாசிட்டம், வைராக்கியப் பிரகரணம் 109– கவி.

மனைவியு மகரும் பொன்னும் மமதைசெய் தமுதம் போல,
நினைவினு னேயஞ் செய்து நீணிலத் துள்ள வெல்லா,
மனையவர்க் காகச் செய்வர். 1

(இ–ள்) மனைவியும்–தாரத்தையும், மகரும்–தனையரையும், பொன்னும்–தநத்தையும், அமுதம் போல–அமிர்தத்துக்குச் சமாந மாக, நினைவினுல்–புத்தியினுலே, நேயம் செய்து–மிகுந்த விசுவாசம் வைத்து, மமதை செய்து–(என தெனும்) அபிமாநம் வைத்து, நீள் நிலத்து–அகன்ற இப் பிரபஞ்சத்தின்கண், உள்ள எல்லாம்–உள்ளன யாவும், அனையவர்க்கு ஆக–மேற்கூறியவர்க் காகவே, செய்வர்–சம்பாதித்துக் கொண்டிருப்பார்கள். எ–று. 1

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

### பாகவதம் மூன் ருவது ஸ்கந்தம் கபிலர் தேவஊதிக்கு உரைத்த எட் டாவது அத்தியாயம் 27 கவி.

விழை வெ னப்படு கின்றது மென்மெல,
வழல்வி ரிந்தக நகத்த ரும்பிமென்,
மழலை மாதர்ம ருங்கிற்ப டர்ந்துபைங்,
குழவி மீதுகொ முந்துவிட் டோங்குமால். 2

(இ-ள்) விழைவு-ஆசை, எனப்படுகின்றது-என்று சொல்லப்படுவது, மென் மெல-கொஞ்சங் கொஞ்சமாக, அழல் விரிந்த-அக்கினி போன்று பிரகாசியாநின்ற, கநகத்து-ஸ்வர்ணத்தினிடத்து, அரும்பி-முளைத்து, மேல்-மிருதுவாகிய, மழலை மாதர்-மழலைச் சொற்களையுடைய ஸ்திரீகளினது, மருங்கில்-சமீபத்தில் சேர்ந்து, படர்ந்து-கொடியாகி, பைம் குழவி மீது-(சிறிய) பசிய பிள்ளைகள் மீது, கொழுந்து விட்டு-தளிர்களாகி, ஓங்கும்-விருத்தியாகும். எ-று. ஆல்-அசை. 2

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

அருணகிரி நாதர், கந்தர் அநுபூதி 39- கவி.

மூவே டணைஎன் றுமுடிந் திடுமோ. 3

(இ-ள்) மூ ஏடணை-தாரம் தநயர் தநம் ஆகியவற்றிலுள்ள ஆசைகள், என்று முடிந்திடுமோ-எப்பொழுது (என்னைவிட்டு) அகலுமோ. எ-று. 3

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

பகவத் கீதை, இரண்டாம் அத்தியாயம் 51- கவி.

குறையுமாப் பிணிப்புற் றுலுங் கொண்டஇப்
புலன்கள் எண்ணில்,
அறைகட லனைய நெஞ்சத் தவாவரு
னறிவி னில்லான். 4



(இ-ள்) அறிவில்-ஆத்மாவின்கண்ணே, நில்லான்-ஸ்திதி பெறாத (அஞ்ஞானியான)வன், கொண்ட-(தான் கருவியாகக்) கொண்ட, இப் புலன்கள்-சுரோத்திர) முதலிய இந்திரியங்களை, குறையும் (ஆறு)-(தவசு முதலியவற்றால்) நிரோதம் ஆகும்படி, பிணிப்புற்றாலும்-தகைந்தாலும், எண்ணில்-அளவிறந்த, அறை கடல் அனைய-அலைகளையுடைய சமுத்திரம் போலும், நெஞ்சத்து-சித்தத்தின்கண்ணுள்ள, அவா அருன்-(விஷய) ஆசை நிவிர்த்தி ஆகாமலே (விஷய நிவிர்த்தி) யடைகிறான். எ-று 4

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

ஞாந வாசிட்டம், உற்பத்தி பிரகரணம் இதோபதேசம் 37- பாட்டு.

அடக்காமா யுரைத்தே மஃதறிந் தவர்க்கு
மறிகிலாத வர்க்குநற் குறிக,
தொடக்கமில் சந்மாத் திரமதா மறிவின்
சொரூபநின் றசைவிலா தவரே,
விடற்கருங் காம முதற்பகை கடந்தோர்
மெய்யறி விலார்கடப் பரியோர். 5

(இ-ள்) அஃது-பரமாத்மாவை, அறிந்தவர்க்கும்-உணர்ந்துள்ளவர்க்கும், அறிகிலாதவர்க்கும்-உணராதவர்கட்கும், நல் குறிகள்-நல்ல இலக்ஷணங்களை, அடக்கம் ஆய்-சங்கிரகமாக, உரைத்தேம்-அறிவித்தோம், தொடக்கம் இல்-(யாதொன்றிடத்தும்) சம்பந்தம் இல்லாத, சந் மாத்திரமது ஆம்-சத்ரூபமாயுள்ள,

அறிவின்–ஆத்மாவின், சொரூபம் நின்று–சொரூபத்திலிருந்து, அசை விலாதவரே-சலந மில்லாதவர்களே, விடற்கு அரும்–(அஞ்ஞாநிகளால்) தியாகஞ் செய்ய முடியாத, காமம் முதல்–இராகத் துவேஷ முதலிய, பகை கடந்தோர்-பகைகளைத் தாண்டினவ ராவர், மெய் அறிவு–உண்மை ஞாநம், இலார்–இல்லாதவர்கள் கடப்ப அரியோர்–தாண்டமுடியாதவ ராவர்கள் எ-று. 5,

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

**ஞாந வாசிட்டம், வைராக்கியப் பிரகரணம் 84– கவி.**

பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போகம்,
நாரியை யில்லா தார்க்குப் போகத்தி னலமெங் குண்டாங்,
காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்,
பேரியல் சகத்து நீங்கிற் பிரிவில்பே ரின்ப முண்டாம். 6

(இ-ள்) யாவன்–எவன், பாரியை யுடையோன்–சம்சாரத்தை உடையவனு யிருக்கின்றானோ, அவனுக்கே–அச் சம்சாரிக்கே, போகம் பற்று ஆம்–போகத்திலிச்சை யாம், நாரியை இல்லாதார்க்கு–ஸ்திரீ யில்லாதவனுக்கு, போகத்தில்–போகத்தின்கண், நலம் எங்கு உண்டாம்–சுகம் எப்படி உண்டாகும், காரிகை தன்னை நீங்கில்-ஸ்திரீ (ஒருத்தி) யை விட்ட வளவிலே, கருத்துறு சகத்து நீங்கும்-மநதிற் பற்றிய பிரபஞ்ச வாசனை அகலும், பேரியல் சகத்து நீங்கில்–நாம ரூப மய மான பிரபஞ்ச வாசனை நீங்கிய அந்தக் கணத்திலேயே, பிரிவில்–(தனது சொருபத்தினின்றும்) பேதியாத, பேரின்பம்



உண்டாம்–பே ராநந்தம் உண்டாகும். எ-று. "காரிகை தன்னை" என்பதில், தன் அசை. 6

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

**அஞ்சு வதைப் பரணி, 26 களங் காட்டல் 6- கவி.**

நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த
நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரின்ப நேராக்,
கைவிட்டா ரொழியாவா நந்த போகக்
காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின். 7

(இ-ள்) நெய் விட்ட-தைல மூட்டிய, கருங் குழலார் தம்பால்–கரிய கூந்தலை யுடைய பெண்களிடத்து. வைத்த–பொருந்திய, நெஞ்சு ஒழிந்தார்–மநதை தன் வச மாக்கியவர்கள், ஐ புலன் சேர்-பஞ்சேந்திரியங்களினாலும் வரப்பட்ட, இன்பம்-விஷயாநந்தத்தை, நேரா–சாக்ஷாத் தாக, கைவிட்டார்-அத்தியந்தம் விட்டவராவார்கள், ஒழியா–(விஷயங்களை விட்டதினால்) இடையறாத, ஆநந்த போக–பிரம்மாநந்த மாகிய போகத்தில், காமுகர் ஆய்–இச்சை யுடையவராய், முடிந்தபடி–இருப்பதை, காண்மின் காண்மின்–பாருங்கள் பாருங்கள். எ–று. "குழலார் தம்பால்" என்பதில் தம் அசை 7

பாயிரம் 1 பொன்னில மாத ராசை.

**நன்னூல் 358 சூத்திரம் சொல்அதிகாரம் பொது இயல் 7**

ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே. 8

(இ-ள்) ஒரு மொழி-ஒரு வாக்கிய மானது, ஒழி-(சொல்லாது) விடுத்த, தன் இனம்-தனது சேர்க்கையான வாக்கியத்தை, கொனற்கு-சேர்த்துச் சொல்லுதற்கு, உரித்து-உரிமை யாகும். எ-று. 8

பாயிரம் 1 பொன்னில மாத ராசை.

**பிரம கீதை, மூன் ருவது அத்தியாயம் 29 பாட்டு.**

பருதி நெஞ்சினு மொழிந்தவர் நெஞ்சினும் பரனே,
கரிய தாகிநின் றறிபவன். 9

(இ-ள்) பருதி நெஞ்சினும்-சூரியனது இருதயத்திலும், ஒழிந்தவர் நெஞ்சினும்-ஏனையவர் இருதயத்திலும், பரனே-பரமசிவனே, கரியது ஆகி நின்று-சாக்ஷியாக இருந்து, அறிபவன்-தானே அறிகின்றவனுகின்ருன். எ-று. 9

ஷை பி. கீ. தை. அ. 3 பா. 30.

உருத்திரன்மான் முதலாகத் தம்ப மீரு வுளபொருட்குஞ்
சான்ருகு மொருவன். 9A

(இ-ள்) உருத்திரன்-உருத்திரன், மால்-மகா விஷ்னு, முதல் ஆக-முதலியன ஆக, தம்பம்-தம்பப் பூச்சி, ஈரு-பரியந்தம் ஆக, உள பொருட்கும்-உள்ள வஸ்துக்கட்கும், ஒருவன்-(ஆன்மா) ஒருவனே, சான்று ஆகும்-சாக்ஷியாவன். எ-று. 9A



**பாகவதம் 2வது அத்தியாயம் 68.**

ஷை

சொன்ன புந்தியிற் கரியெனத் தோன்றிய வறிவை. 10

(இ-ள்) சென்ன-(முன்னே) உபதேசித்த, புந்தியில்-புத்தியினிடத்து, கரி என-சாக்ஷியாக, தோன்றிய-இருக்கின்ற, அறிவை-ஆன்மாவை. எ-று. 10

பாயிரம் 1 பொன்னில மாத ராசை.

**பிரம கீதை, பதி னேராவது அத்தியாயம் 16 பாட்டு.**

புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற,
சொரூப நின்றவா நிற்கவிங் கருளொடு
தோன்றவல் லவன்ருனே,
யரனு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுள்
ளாகியே யர்வர்க்குந்,
தெரிவ ருஞ்சிவ னவனையிங் கொருங்கிய
சிந்தையார் தெளிவாரே. 11

(இ-ள்) புருடன் என்று-புருஷன் என்று, உரை செயப்படுவது-சொல்லப்படுவது, பரிபூரணம்ஆகின்ற-(அகண்ட) பரிபூரண மாகிய, சொருபம் நின்ற ஆ(று)-(தனது) சொருபம் விளங்கி நின்ற வண்ண மாக, நிற்க-இருக்கவும், இங்கு அருளொடு-இங்கு கிருபையே வடி வாகிய பராசத்தியோடு, தானே தோன்ற வல்லவன்-தானே விளங்கவல்லவனுவன், அரனும் அன்று-(அவன்) உருத்திரனு மல்லன், மால் அன்று-மகா விஷ்ணுவு மல்லன், அயனும் அன்று-பிரமனு

மல்லன், எவர்க்கும் உள் ஆகி-யாவருக்கும் ஆந்தரன் ஆகி, யாவர்க்கும் தெரிவு அரும்-எவர்களாலும் அறியக் கூடாத, சிவன்-சிவ பெருமானே ஆவான், அவனை-அந்தச் சிவ பெருமானை, இங்கு ஒருங்கிய-இவ்விடத்தில் ஒருமைப்பட்ட, சிந்தையார்-சித்தத்தை உடையவர்கள், தெளிவார்-அறிவார்கள். எ-று. ஏ அசை. 11

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

**பகவத் கீதை, நான் காம் அத்தியாயம் 7 கவி.**

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா,
ஞவாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக,
மேவாது நின்றேயென் மாயையினுல் மெய்யேபோ,
லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும். 12

(இ-ள்) சாவாது பிறவாது-மரண மகாமலும் ஜநநமாகாமலும், தனி முதல் ஆய் இருந்த நான்-ஈசுர னுகியிருந்த நான், ஆஅ-ஆச்சரியம், இவ் வுலகுபடும்-சாதுக்கள் படுகின்ற, அழிதுயர் தீர்ப்பதற்கு ஆக-கொடிய துன்பத்தை நிவிர்த்தித்தற்பொருட்டு, மேவாது நின்றே-(ஜநந மடையாமல்) இருந்த வண்ண மிருந்தே, என் மாயையினுல்-எனது மாயா வசத்தினுல், மெய்யே போல்-தேக முடையவன் போல, ஓவாது-ஒழியாது, உகந்தோறும் உகம் தோறும்-ஒவ்வொரு யுகங்களிலும், பிறந்திடுவேன்-(சத்துவ மூர்த்தியாய்) அவதரிப்பேன். எ-று. 12

ஷ

**திரு வாய் மொழி, மூன் ரும் பத்து, 10ல் 6 கவி.**



துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி
நின்ற வண்ண நிற்கவே,
துயரின் மலியும் மனிதப் பிறவியிற்
ரேன்றிக் கண்காண வந்து,
துயரங்கள் செய்து தன்றெய்வ நிலை
யுலகிற் புகவுய்க்கு மம்மான்,
துயரமில் சீர்கண்ணன் மாயன் புகழ்துற்ற
யானோர் துன்பமிலேனே. 13

(இ-ள்) துயர் இல்-துன்பமின்றிய, சுடர் ஒளி-பூரணப் பிரகாச ரூப, தன்னுடைச் சோதி-தனது பிரகாசமானது, நின்ற வண்ணம் நிற்க-இருந்தபடியேயிருக்க, துயரில் மலியும்-துன்பத்தில் மூழ்கியிருக்கும், மனிதப் பிறவியில்-மாநுட ஜென்மத்தில், கண் காணத் தோன்றி வந்து-பிரத்யக்ஷமாக எழுந்தருளி வந்து, துயரங்கள் செய்து-துன்பத்தை அநுபவித்து, தன் தெய்வ நிலை-தனது தெய்வத் தன்மையை, உலகில் புக உய்க்கும்-உலகில் தெரியும்படி செய்யும், அம்மான்-பெருமை பொருந்திய, துயரமில்-துக்கமின்றிய, சீர் கண்ணன்-சிறப்பினையுடைய கண்ணனுகிய, மாயன்-மகா விஷ்ணுவை, புகழ்து உற்ற-தோத்திரம் செய்கின்ற, யான் ஓர் துன்பம்-நான் ஒரு துன்பமும், இலேன்-இல்லாதவனுக இருக்கின்றேன். எ-று. ஏ ஏ-அசை. 13

பாயிரம் 1. பொன்னில மாத ராசை.

**அஞ்ஞ வதைப் பரணி, 12 லீலை 7 கவி.**

தன்ப ராபரம தானதிரு மேனி நிலையிற்
சலந மின்றியொரு தன்மையினி னின்ற ருளியே,
யன்ப ரானவர்க னெஞ்சினிலு வந்த வடிவா
யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்த வருளும். 14

(இ-ள்) தன் பர அபரமது ஆன-தன்னுடைய பரத்துக் கெல்லாம் பரமா யுள்ள, திரு மேனி நிலையில்-திவ்விய மங்கள மூர்த்தத்தி லிருந்து, சலநம் இன்றி-மாறுபடாது, ஒரு தன்மையினில்-ஒரே படித் தாக, நின்று அருளி-இருந்து, அன்பர் ஆனவர்கள்-அன்புடையவர்கள், நெஞ்சினில்-(தன்னுடைய) மநதில், உவந்த-விரும்பிய, வடிவு ஆய்-மூர்த்த மாக, அங்கு வந்து அவர்கள்-அவர்கள் மநதில் தோன்றி, உய்யும் வகை செய்த-மோக்ஷ மடையும் படியாகச் செய்த, அருளும்-அநுக்கிரகத்தையும். எ-று. 14

பாயிரம் 1. பொன்னில மாது ராசை.

**திரு வாய் மொழி முதற் பத்து 3-ல், 6 கவி.**

உணர்ந் துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு
வியந்த வின்நிலைமை,
யுணர்ந் துணர்ந் துணரினு மிறைநிலை
யுணர்வரி துயிர்கா,
ளுணர்ந் துணர்ந் துரைத் துரைத்
தரியயனர னென்னுமிவரை,
யுணர்ந் துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின்
மநப்பட்ட தொன்றே. 15



(இ-ள்) உயிர்காள்-ஜீவர்களே, உணர்ந்து-உணர்ந்து, அறிந்து அறிந்து, இழிந்து அகன்று-இறங்கி விரிந்து, உயர்ந்து-மேம்பட்ட, உருவு இயந்த-சொருபத்தினை பொருந்திய, இந் நிலைமை-இந்தத் தன்மையை, உணர்ந்து உணர்ந்து-அறிந்து அறிந்து, உணரினும்-தெரிந்திருந்தாலும், இறை நிலை-பகவானது தன்மையை, உணர்வு அரிது-அறிதல் துர்லபமாம், உணர்ந்து உணர்ந்து-(மநதால்) அறிந்து அறிந்து, உரைத்து உரைத்து-(வாக்கால்) தோத்தரித்து தோத்தரித்து, அரி அயன் அரன்-நாராயணன் பிரம்மா உருத்திரன், என்னும் இவரை-என்ற இவர்களை, உணர்ந்து உணர்ந்து-அறிந்து அறிந்து, உரைத்து உரைத்து-சொல்லி சொல்லி, இறைஞ்சுமின்-நமஸ்கரியுங்கள், மநம் ஒன்று பட்டது-மநம் ஏகாக்கிரத்தையடைதற்பொருட்டு, "இயைந்த என்பது, இயந்த என வந்தது. எ-று. 15

ஷை

**முதற் பத்து 3 ல், 7 கவி.**

ஒன்றெனப்பல வெனவறி வரும்வடி வினுனின்ற,
நன்றெழினு ரணனுன் முகனர னென்னுமிவரை,
ஒன்ற நும்மநத் துவைத்துள்ளி நும்மிரு பசையறுத்து,
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே.

(இ-ள்) ஒன்று என-ஏகம் என்றும், பல என-அநேகம் என்றும், அறிவு அரும்-அறிதற்கு அருமையான, வடிவினுள் நின்ற-சொருப மாக இருக்கின்ற,

நன்று எழில்-நல்ல அழகோடு கூடிய, நாரணன்-நாராயணன், நான் முகன்-பிரம்மா, அரன் என்னும் மும் மூர்த்திகளாகிய இவர்களை, நும் மநத்து-உங்களுடைய மநதில், ஒன்ற வைத்து உள்ளி-நிலைக்கச் செய்து தியாநித்து, நும் இரு பசை-உங்களுடைய புண்ணிய பாவங்களை, அறுத்து-ஒழித்து, அவனிடை-அந்த பகவானிடத்து, நன்று என-சிரேஷ்டமென்று, நலம் செய்வது-பக்தியைச் செய்வது, நம்முடை நாள்-நமது நாளாம் (மற்றவை யெல்லாம் நமனுடை நாளாம்). எ-று. 16

பாயிரம் 3 எவருடை யருளால்.

**பிரபு லிங்க லீலை 24 வது மநோ லய கதி 15 கவி.**

வாநமல்லேன் வளியல்லே னழனி
ரல்லேன் மண்ணல்லேன்,
ஞாநமல்லேன் வினையல்லே னுனே
சிவமென் றெண்ணினேனே,
ஊநமில்லா வொருசிவமே யாவ
னிவ்வா றுன்னுதா,
னீநமெல்லா முடையவுடம் பெடுத்துச்
சுழலு மெஞ்ஞான்றும். 17

(இ-ள்) வாநம் அல்லேன்-ஆகாயமல்லேன், வளி அல்லேன்-வாயுவு மல்லேன், அழல்-அக்கிநியு மல்லேன், நீர் அல்லேன்-அப்புவு மல்லேன், மண் அல்லேன்-பிருதிவியு மல்லன், ஞாநம் அல்லேன்-(கடபடாதி) ஞாநமும் அல்லன், வினை அல்லேன்-இரு வினைகளி லொன்று மல்லன் (ஆதலின்), நானே சிவம் என்று-நானே சிவ வடிவ மென்று, எண்ணினேன்-திட நிச்சயங் கொண்டோன், ஊநம் இல்லா-குற்ற மற்ற, ஒரு சிவமே யாவன்-ஒப்பற்ற சிவ வடிவாகவே விளங்குவான், இவ்வாறு உன்னுதான்-இவ்வாறு சிந்தியாதவன், ஈநம் எல்லா முடைய-இழிவனைத்தும் வடிவாக வுடைய, உடம்பு எடுத்து-தேக மெடுத்து, எஞ்ஞான்றும் சுழலும்-எப்பொழுதும் சுழன்று கொண்டிருப்பன். எ-று. 17



பாயிரம் 3 எவருடை யருளால்.

**பிரம கீதை பத்தாவது அத்தியாயம் 25 கவி.**

மாய வன்புலத் தெழாவகை தீர்ந்ததன்
வாய்மையான் மயிர்க் காலாற்,
பாய வின்னமு திருசெவித் துளைவழி
பாய்ச்சினுன் பதுமத்தா,
டாயுந் தந்தையுஞ் சுற்றமு மற்றுநற்
றநமுமென் றடைவான்றன்,
காய முள்ளள வும்புகழ்ந் தேத்துவான்
கற்றதோர் கலையாலே. 18

(இ-ள்) வன் புலத்து எழா வகை-வலிய ஐ புலன்களால் வரப்பட்ட சத்தாதி விஷயங்கள் உண்டாகாதபடி, மாய-கெடுத்து, மயிர் காலால்-ரோமத் துவாரங்கள் தோறும், இன் அமுது-இனிய அமுதம் போன்ற, தீர்ந்த தன் வாய்மையால்-தெளிந்த தன் உபதேசத்தி

ஞல், இரு செவித் துளை வழி—இரு காதின் துளை வழித் தாக, பாய பாய்ச்சினுன்—(சொருபத்திற்) பாயும்படி அருளிய (ஆசாரியரது), பதுமத் தாள்—தாமரை மலர் போன்ற திருவடிகளே, தாயும் தந்தையும்—மாதாவும், பிதாவும், சுற்றமும் நல் தநமும்—பந்து க் களும் உயர்ந்த ஐஸ்வரியமும், மற்றும் என்று—இன்னும் (விரும்பிய யாவும்) என்று, அடைவான்—சரணடைகின்றவன், தன் காயம் உள்ள அளவும்—தன் சரீர முள்ள வரைக் கும், கற்றது ஓர் கலேயாலே—தான் கற்ற ஒப் பில்லாத கல்வியினுல், புகழ்ந்து ஏத்துவான் துதி செய்யக் கட வன். எ—று. ஏ—அசை. "உள்ள அளவும்" என் பது அகராம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. 18

பாயிரம் 4 என்னுடை மனது.

**ஞாந வாசிட்டம், மூன் ருவது உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 70 கவி.**

பரமமா மறிவின் முன்னே புறப்படும் பொய்யா முள்ளம்,
புவநவிகற் பங்களெனும் பொய்யைக் காட்டும். 19

(இ-ள்) பிரமம் ஆம் அறிவின் முன்னே—பரமாத்ம தத்துவத்தினின்றும் பூர்வம், பொய்யாம் உள்ளம்—பொய் யாகிய மந மானது, புறப்படும்—உண்டாகும். புவந விகற்பங்கள் என்னும்—இச் சக விகற்பங்கள் என்னும் (அம் மநதின் விகற்ப ஜாலங்க ளான), பொய் யைக் காட்டும்—மித்தை யா க வே தோற்றுவிக்கும். எ-று. 19



பாயிரம் 4 என்னுடை மனது.

**பிரம கீதை 12 வது அத்தியாயம் 17 கவி.**

ஈச னிங்கருள் செய்யவந் திருக்கிற விடமிவன் றிருமேனி. 20

(இ-ள்) இவன் திரு மேனி-இந்தக் குரு மூர்த்தி யினது திவ்விய தேக மானது. ஈசன் இங்கு அருள் செய்ய-பரமசிவனே இவ்விடத்து அநுக்கிரகஞ் செய்ய, வந்திருக்கிற இடம்—வந்திருக்கிற ஸ்தாநமாம். எ—று. 20

ஷ

**பிரம கீதை 12வது அத்தியாயம் 21 கவி.**

உண்டுபோற் ருேன்று முலகெலா முண்மை
யன் றென வுணர்த்தியெப் பொருளுங்,
கண்டசான் றதனைக் காட்சிய தறவே
கண் டிடக் கரி யெனக் காட்டும்,
பண்டைவே தாந்த வாக்கியஞ் சொன்ன
படியிலே பரமனே டொன்ருய்,
விண்டிடா வண்ண முணர்த்துவான் றன்னை
வியன்குரு வென்றிடும் வேதம். 21

(இ-ள்) உண்டு போல் தோன்றும்—(சத்திய மாய்) இருக்கின்றது போலத் தோற்றுகின்ற, உலகு எலாம்—சகங்க ளனைத்தையும், உண்மை அன்று என—சத்திய மல்ல வென்று, உணர்த்தி—அறிவித்து. எப் பொரு ளும் கண்ட—எல்லாப் பொருள்களையுங் காண்கின்ற, சான்றதனை—சாட்சியை, காட்சியது அறவே—திருசிய

மில்லாமல், கண்டிட-காணும்படி, கரி எனக் காட்டும்-சாட்சி யாகத் தெரிவிக்கின்ற, பண்டை வேதாந்த வாக்கியம்-பழமையான வேதாந்த மகா வாக்கியம், சொன்னபடியிலே--கூறிய வண்ணமே, பரமனோடு-பிரமத்தோடு. ஒன்று ஆய்-அபேத மாய், விண்டிடா வண்ணம்-பிரியாதபடி, உணர்த்துவான் தன்னை-உபதேசிப்பவனையே. வேதம்-சுருதியானது, வியன் குரு என்றிடும்-சிரேஷ்டம் பொருந்திய ஆசாரிய ரென்று சொல்லும். எ-று. ''உணர்த்துவான் தன்னை'' என்பதில் தன் அசை "சான்றதனை'' என்பதில், தன் அசை. 21

பாயிரம் 4 என்னுடை மனது.

### பிரம கீதை 12 வது அத்தியாயம் 122 வது கவி.

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்
கண்ணொழிந் தொருபொரு ளில்லா,
மாட்சியை யளிக்க வல்லவன் குருவா
மாரிபோன் மாறுவேண் டாதே,
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும்
வித்தகக் குரவனே யெவருந்,
தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ்
சங்கர னென்றிடத் தகுவான். 22

(இ-ள்) காட்சியை எல்லாம்-திருசியங்களை யெல்லாம், கண்ணது ஆய்க் கரைத்து-திருக் காகும்படி செய்து, கண் ஒழிந்து-திருக்கைத் தவிர, ஒரு-



பொருள் இல்லா-வேறொரு வஸ்துவு மில்லாத, மாட்சியை யளிக்க வல்லவன்-பெருமையைக் கொடுக்கும் திற முடையவனே, குரு ஆம்-ஆசாரிய னவன், மாரி போல் மாறு வேண்டாது-மேகங்களைப் போல பிரதி யுபகாரம் விரும்பாமல், மீட்சியில் பதத்தை-திரும்புத லில்லாத பதவியை, கருணையால் அளிக்கும்-கிருபையி னாலே உபதேசிக்கும், வித்தகக் குரவனே-ஞானாசாரிய ரே, எவரும் தாழ்ச்சி செய்து-எல்லாரும் தாழ்ந்து ஏத்தற்கு உரிய தத்துவம் ஆம்-துதித்தற் குரிய தத்துவ சொரூபி யாகிய, சங்கரன் என்றிடத் தகுவான்-சங்கர னென்று செல்லத் தகுவன். எ-று. ஏ அசை. 22

தத் 11 சாதன மின்றி.

### குமரா தேவ ஸ்வாமிகள் செய் தருளிய அத்துவித வுண்மை.

மேலாம் சதுட்ட சாதநங்கண்
மேவி நிறைந்த பேர்க்குரைக்கின்,
மேலா மதுநா மெனத்திடமாய்
விளங்கு மவையில் லாதவர்க்கு,
மேலாம் பரமன் மான்மமுவாய்
விளங்கி யுரைத்தும் விளங்காது,
மேலாம் சாத நங்கள்வர
மேவ வேண்டும் சாதுசங்கம். 23

(இ-ள்) மேல் ஆம்-உயர் வாகிய, சதுட்ட சாதநங்கள் மேவி-சாதந சதுட்டயங்களைப் பொருந்தி,

நிறைந்த-பூரணமாகவுடைய, பேர்க்கு-அதிகாரிகளுக்கு, உரைக்கின்-(பிரமப் பொருளை) உபதேசிக்கின், மேல் ஆம் அது-சிரேஷ்டம் பொருந்திய பிரமம், நாம் என-நாமே என்று, திடம் ஆய் விளங்கும்-நிச்சயமாக விள்ங்கும். அவை இல்லாதவர்க்கு-மேற் கூறிய சாதந சதுட்டய மில்லாதவர்க்கு, மேல் ஆம் பரமன்-உயர்வு பொருந்திய பரசிவனே. மான் மழு ஆய்-மான் மழு சூலம்அக்நிமுதலியதோடு ரிஷபாரூடராய், விளங்கி-எழுந்தருளி, உரைத்தும்-உபதேசித்தும், விளங்காது-விளங்கமாட்டாது (ஆகலின்), மேல் ஆம் சாதநங்கள் வர-உயர்வுடைய சாதநங்களை அடைய, சாது சங்கம் மேவ வேண்டும்-சாதுக்கள் சங்கத்தை அடையவேண்டும். எ-று. உரைத்தும் என்ற உம்மை இழிவு சிறப்பு. 24

தத் 11. சாதனமின்றி.

ஞாந வாசிட்டம் 4வது திதிப் பிரகரணம் தாசூரன் கதை 12ம் கவி.

தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தவுனைப்
போல்வார்க்கே திகழத் தோன்றும். 24

(இ-ள்) தியக்குறு போகத்து-மயக்கத்தைச் செய்யும் போகங்களில், ஆசை தீர்ந்து-அவா ஒழிந்து, புந்தி தெளிந்த-புத்தி தெளிவை யுடைய, உனைப் போல்வார்க்கே-உன்னைப் போன்றவர்க்கே, திகழத் தோன்றும்-(அந்தப் பிரம்மம்) உபதேசித்தலும் ஆம், ஸ்பஷ்டமாகவும் விளங்கும். 24



தத் 12 இவனதி காரி.

அஞ்சு வதைப் பரணி 14 குறி 8வது கவி.

தெருளுறுங்கலை பலவு ணர்ந்தொரு சிறுத லம்பிறவா,
வருளுறுங்குரு பரனிருந்திட மறிய வென்றெழுமே. 25

(இ-ள்) தெருள் உறும்-ஞானத்தோடு கூடிய, பல கலை உணர்ந்து-அநேக சாஸ்திரங்களை சிரவணித்து அறிந்து, ஒரு சிறிது அலம் பிறவா-கொஞ்சமும் திருப்தி யடையாது, அருள் உறும் குருபரன்-கருணையே திருவுருவாக எழுந்தருளிய ஆசாரியர், இருந்த இடம்-இருக்குமிடத்தை, அறிய என்று எழும்-அடைவோம் என்று நினைத்துச் சில பேய்கள் செல்லுவர். எ-று. ஏ-அசை. 25

தத் 20 தன்னையுந் தனக்கா தாரத்.

பகவத் கீதை 4வது அத்தியாயம் 4 வது கவி.

நல்ல காதல் செய் நண்பனு மாயெனை, யல்ல தியாவு ம
றியலை யாதலாற், சொல்லன் மேயினன். 26

(இ-ள்) நல்ல காதல் செய் நண்பனும் ஆய்-(என்னிடத்து) அன்பு செய்கின்ற சிறந்த சிநேகிதனாகியும், எனை அல்லது-என்னை அல்லாமல், யாவும் அறியலை-(வேறே) ஒன்றனையும் அறியாத பத்தனாயுமிருக்கின்றனை, ஆதலால்-அக் காரணத்தினால், சொல்லன் மேயினன்-(உனக்கு) உபதேசிக்கத் தொடங்கினேன். எ-று. 26

தத் 21 என்னைத்தான்.

ஞாந வாசிட்டம் வீம பாச திடர் கதை 13 வது கவி.

கரசர ணாதி மட்டா நானிவ னென்று காணுந், திரமது தா
னே மூன்று மகங்கரஞ் செகத்தோர்க் கெல்லா, முரியதாம். 27

(இ-ள்) கர சரண ஆதி மட்டாம் இது-கை கால் களாதி மாத்திர மாயுள்ள இத் தேகமே, நான் இவன் என்று-நான் என்றும், இவன் என்றும், காணும்-பார்க்கும், திரமது தானே-நிச்சய வடிவ பொய் யபிமானே, மூன்றும் அகங்கரம்-மூன்றுவது (லௌகிக) அகங்கார மாகும். செகத்தோர்க்கு எல்லாம்-பிரபஞ்சத்தின்கண்ணுள்ள யாவர்க்கும், உரியது ஆம்- இது (லௌகிகமே) யாகும். எ-று. 27

தத் 24 நனவுகண் டது.

ஞாந வாசிட்டம் 4 தாசூரன் கதை 14 கவி.

இம்மொழிக ளாலிமைப்போ திருளா மீள
விமைப்போது வெளியாகு மிவ்வா றாகி,
மைம்முகிலா லற்பமாய் வெய்யிற் சீதம்
வந்துவந்து போகின்ற மழைநா ளொத்தேன். 28

(இ-ள்) இம் மொழிகளால்-முன் னுபதேசித்த திவ்விய வசநங்களால், இமைப் போது-க்ஷண நேரம், இருள் ஆம்-(அஞ்ஞாந மய) இருள் தோற்றுகின்றது, மீள இமைப் போது-மறுபடியும் க்ஷண நேரத்தில், வெளி யாகும்-(ஞாந மய) பிரகாசத் தன்மையை யடைகின்றேன், இவ் வாறு ஆகி-இப்படி மயக்க முற்றவனாகி, மை முகிலால்-கரிய மேகத்தால், அற்பம் ஆய்-லவ லேச மாய், வெய்யில் சீதம்-உஷ்ணமும் சீதனமும், வந்து வந்து போகின்ற-தோன்றித் தோன்றி மறைகின்ற, மழை நாள் ஒத்தேன்-மழைக் காலத்திய நாளுக்குச் சமாந மானேன். எ-று. 28



தத் 24 நனவு கண்டது.

ஞாந வாசிட்டம் 6 வது சிகித் துவசன் கதை 143 கவி.

இந்தவடி வாமெனக்கோ ரேது காணே
னிடர்மநந்தா ருவின்விதையா மகங்கா ரத்தை,
யுந்தும்வகை யறிகிலே னுந்த வுந்த
வேர்டிவரு மதனலுள் ளுடைந்தேன். 29

(இ-ள்) இந்த வடிவு ஆம் எனக்கு-இந்த வுருவமான எனக்கு, ஓர் ஏது காணேன்-ஒரு காரணத்தைக் கண்டிலேன், இடர் மநத் தாருவின்-துன்புறுத்தாநின்ற மந மாகிய விருக்ஷத்தின், விதை ஆம் அகங்காரத்தை-விதை யாகிய ஆங்காரத்தை, உந்தும் வகை அறிகிலேன்-தள்ளும் பிரகாரத்தை அறிந்திலேன், உந்த உந்த ஓடிவரும்-தள்ளத் தள்ள மறுபடியும் ஓடிவந்துவிடுகின்றது, இதனல்-இக் காரணத்தால், உள் உடைந்தேன்-சிந்தை நைந்தேன். எ-று. 29

தத் 26 அத்தியா ரோப.

ஞாந வாசிட்டம் மூன்ரும் பிரகரணம் ஞாந விண்மகன் கதை 11 கவி.

பந்தத் துருவங் கேட்டுணரிற்
பரவீட்டுருவ மேல் வெளியாம். 30

(இ-ள்) பந்தத்து உருவம்-பந்தத்தின் சொரூபத்தை, கேட்டு உணரில்-(கூறக்) கேட்டு அறிந்து கொள்ளுவாயாகில், பர வீட்டு உருவம்-மேலான மோக்ஷத்தின் சொருபம், மேல் வெளி ஆம்-பின்னன் ருகத் தெரிந்து கொள்ள லாம். எ-று 30

ஷி

ஞாந வாசிட்டம் மூன்ரும் பிரகரணம் ஞாந விண்மகன் கதை 11 கவி.

இந்தச் சகநீ நான்முதலா மிவைமெய் யென்றல் பந்தமதா,
மந்தக் கருத்து நிற்பளவு மரிதா முத்தி. 31

(இ-ள்) இந்தச் சகம்-(திருசியமய) இவ் வுலகம், நீ நான்-(திருஷ்டாமய) துவம் அகம், முதலாம் இவை-ஆதிய விவற்றை, மெய் என்றல்-சத் தென் றெண்ணுதல், பந்தமது ஆம்-பந்த மென்று சொல்லப்படும், அந்தக் கருத்து-அந்த எண்ணம், நிற்ப அளவும்-இருக்கும் வரையும், முத்தி அரிது ஆம்-மோக்ஷம் கிடையாதாம். எ-று. "நிற்பளவும்" என்பதில், நிற்ப என்பதில், அகரம் செய்யுள் விகரத்தால் தொக்கது. 31



தத் 26 அத்தியா ரோப.

ஞாந வாசிட்டம் நான் காம் பிரகரணம் கசன் கதை 9கவி.

துன்றுவா தனையே பந்தந் தொல்லைவீ டதனைத் தீர்தல். 32

(இ-ள்) துன்று வாதனையே-நெருங்கிய துர்வாசனையே, பந்தம்-பந்த மென்று சொல்லப்படும், தொல்லை அதனை-அநாதியா யுள்ள அப் பந்தத்தை, தீர்தல் வீடு-நிவர்த்தி செய்து கொள்வதே மோக்ஷ மாம். எ-று. 32

ஷி

வாசிட்டம் 6 பிரகரணம் இக்ஷுவாகு கதை 64வது கவி.

ஈனமான வகங்காரப் பிராந்தி யன்ரே விடர்பந்த,
மானவீடா வதுமடமை யந்த காரங் கெடலன்ரே. 33

(இ-ள்) ஈனம் ஆன-நீச மான, அகம் பாவப் பிராந்தி யன்ரே-அகந்தை யாகிய மயக்க மல்லவா, இடர் பந்தம்-துன்பத்தைக் கொடுக்கும் கட்டாம், ஆன வீடு ஆவது-ஞாநத்தா லான மோக்ஷ மாவது, மடமை அந்தகாரம்-அறியாமை யாகிய பேரிருள், கெடல் அன்ரே-கெடுத லல்லவோ. எ-று. 33

தத் 28 இப்படிப் போல.

பிரம்ம கீதை 4வது அந்தியாயம் 15 கவி.

அவிச்சை விச்சைகடா, மோதுமாத் திரமா முலகுரை
வழக்கத் துள்ளன வுண்மையி லில்லை. 34

(இ-ள்) அவிச்சை விச்சைகள்-அவித்தை வித்தைகளென்பது, ஓது மாத்திரம் ஆம்-வசந மாத்திர மாகிய, உலகு உரை வழக்கத்து உள்ளன-லோக வசந மாக வழங்குவதான விவகாரத்தில் உள்ளது. உண்மையில்-(விசாரிக்கு மளவில்) யதார்த்த மாக, இல்லை-(அவிச்சை விச்சை கள்) இல்லை. எ-று. தாம் அசை. 34

தத் 29 அதுநானெப் படி.

பிரம கீதை 5வது அத்தியாயம் 36வது கவி.

காலமுங் கன்மந் தானும் பரிபாக மான வாறே,
ஞாலமுண் டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்,
பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக,
வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து
பார்த்தான். 35

(இ-ள்) காலமும் கன்மந் தானும்-காலமும் கருமமும், பரிபாகம் ஆன ஆறு-பரிபக்குவ மான விதத்தினால், ஞாலம் உண்டாக-உலகைச் சிருஷ்டி செய்யும், நல்ல குணத்தினை-சத்துவ விருத்தியை, கலந்து நிற்கும்-சேர்ந்து நிற்கும், பாலது ஒன்று இல்லா-(உண்மையில் ஒரு குணமும்) தன்னிடத் தில்லாத, இந்தச் சத்திமான்-இந்தச் சத்தி யுடையவன், படைத்தற்கு ஆக-சிருட்டி செய்வதற்காக, ஏலவே-(பூர்வ கற்பத்திலுள்ள வாசனையா லுண்டான சமஸ்காரத்திற்கு) ஏற்கவே, எல்லாம் ஆவோம்-சகலமும் ஆவோம், என்று கொண்டு-என்று (உட்) கொண்டு, இசைந்து பார்த்தான்-ஈக்ஷணம் செய்தான். எ-று. "தானும்" என்பதில், தான் அசை. 35



தத் 30 உத்தம வெளுப்புச்.

பகவத் கீதை 14வது அத்தியாயம் 7வது கவி.

சத்து வம்ரச சோடுத மசென,
உய்த்து வந்தபெ யரையு டையன,
வெத்து வந்துவ முந்தரு கிற்பன,
மெத்து வந்தவற் றின்செயல் வேறுகேள். 36

(இ-ள்) சத்துவம் ரசசோடு தமசு என-சத்துவமெனவும் ரஜ செனவும் தம செனவும், உய்த்து வந்த-(பெரியோர்களால்) இடப் பெற்ற, பெயரை உடையன-நாமங்களை யுடையன, எத் துவந் துவமும்-எவ்வகைப்பட்ட துவந் துவங்களையும், தருகிற்பன-(ஜீவாந்மாவுக்கு) கொடுப்பன வாம், மெத்து வந்த-மிகுதியாய் வந்த, அவற்றின்-அச் சத்து வாதி குணங்களின், செயல் வேறு கேள்-செய்கையின் வேறுபாட்டைக் கேட்பாய். எ-று. 37

தத் 30 உத்தம வெளுப்பு.

பகவத் கீதை 14வது அத்தியாயம் 8வது கவி.

பற்று மாசின்மை யாற்பளிங் கொப்பது,
வுற்ற நல்லறி வானதுண் டாக்குவ,
தெற்று மின்பமல் லாற்றுன்ப மென்பது,
சற்று மில்லது சத்துவ மாவதே. 37

(இ-ள்) சத்துவம் ஆவது-சத்துவ குண மாவது,

பற்றும் மாசு இன்மையால்-நிர்மலத் தன்மையினுல், பளிங்கு ஒப்பது-ஸ்படிக மணி போலப் பிரகாசமா யுள்ளது, உற்ற நல் அறிவு ஆனது-அநுகூல மான நல்ல ஞாநத்தை, உண்டாக்குவது-உண்டு பண்ணுவது, எற்றும்-என்றும், இன்பம் அல்லால்-(சுக ரூப) ஆநந்த மல்லாமல், துன்பம் என்பது-துக்கம் என்பது சற்றும் இல்லது-கொஞ்சமு மில்லாத தாம். எ-று. 37

ஷி

ஷி ஷி 9 வது கவி.

ஓது ராகவு ருவமு டையது,
தாது கற்புரை யுண்ணிறஞ் சார்ந்தது,
பேது செய்வினை யோடறி வைப்பின்னற்,
கேது வாயதி ராசத மென்பதே. 38

(இ-ள்) இராசதம் என்பது-இரஜோ குண மென்று சொல்லப்படுவது, ஓது ராக உருவம் உடையது-சொல்லாநின்ற இராக ரூப முடையது, தாது கல் புரை-காவிக் கல் போன்ற, உள் நிறம் சார்ந்தது-உண் ணிறம் பொருந்தினது. பேது செய் வினையோடு-மதி மயக்கம் செய்யும் (லௌகிக வைதிக) கர்மங்களோடு, அறிவைப் பின்னற்கு-ஜீவாத்மாவைப் பந்தித்தற்கு, ஏது ஆயது-காரணமா யிருப்ப தாம். எ-று. 38

தத் 30 உத்தம வெளுப்பு.

ஷி ஷி 10 வது கவி.



குறியு நீலம மயக்கமுங் கோதிலா,
நெறி கடம்மையி கழ்தலு நித்திரை,
செறித லானது மற்றிவற் ருற்றிண்ணென்,
றறிவை மாய்க்கும துதம மாவதே. 39

(இ-ள்) தமம் ஆவது-தமோ குண மென்று சொல்லப்படுவது, குறியும் நீலம்-(அறி) குறியும் கரு நிற முடைய தாம், மயக்கமும்-பிரமாதமும், கோது இலா-குற்ற மற்ற, நெறிகள்தம்மை-நல் லொழுக்கங் களை, இகழ்தலும்-இகழாநிற்கும் ஆலசியமும், நித்திரை செறிதல் ஆனதும்-நித்திரையை யுண்டுபண்ணு வதும், இவற்ருல்-(ஆகிய) இவைகளால், திண் என்று-திடமாக, அறிவை மாய்க்கு மது-ஜீவனை பந்தித்து வருத்துவ தாம். எ-று. "நெறிகள் தம்மை" என்பதில், தம் அசை. 39

ஷி

ஈசுர கீதை ஏ மூாவது அத்தியாயம் 16 வது கவி.

ஒத்தமுக் குணங்களாம் பகுதி யுத்தமஞ்,
சத்துவ ஞாநமாந் தமமஞ் ஞாநமாம்,
மத்திமங் கலப்பதா மற்றிம் மூன்றையும்,
புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால். 40

(இ-ள்) ஒத்த முக் குணங்கள் ஆம்-தம்மில் சம மாகப் பொருந்தியன வாகிய முக் குணங்களும், பகுதி-பிரகிருதி யாம், உத்தமம் சத்துவம்-(அதில்) சுத்த சத்துவ குண மானது, ஞாநம் ஆம்-ஞாந ரூப மாம், தமம்-தமோ குண மானது, அஞ்ஞாநம் ஆம்-அஞ்ஞாந

மாகும், மத்திமம்-மத்திம மாகிய ரஜோ குண மானது, கலப்பது ஆம்-(சத்துவ குணம் தமோ குண மாகிய இரண்டையும் சம மாக) கலந்து இருப்ப தாம், மற்று-பின்னர், இம் மூன்றையும்-இம் மூன்று குணங்களை யும், புத்தியின் விகாரமே-புத்தியினது விகாரத் தன்மையே, புலப்படுத்தும்-அறிவிக்கும், எ-று. ஆல்-அசை. 40

தத் 30 உத்தம வெளுப்பு.

### பகவத் கீதை 14 வது அத்தியாயம் 13ம் கவி.

வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத்,
தாழு மற்றைய விரண்டுமத் தாமோகுணந் தழைப்பின்,
வீழுஞ் சத்துவந் தமங்களவ் விரசதம் விளைவி,
னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தோன்றுமிக் குளதாம்.
41

(இ-ள்) மற்றைய இரண்டையும்-ஏனைய (இரஜோ குண தமோ குணங்கள்) இரண்டனையும், மறைத்து-(எழ வொட்டாமல்) அடக்கி, சத்துவம் வாழும்-சத்துவ குண மானது விருத்தி யடையாநிற்கும், தமோ குணம் தழைப்பின்-தமோ குண மானது விருத்தி யடையின், மற்றைய இரண்டும் தாழும்-ரஜோ குன சத்துவ குணங்க ளிரண்டும் அடங்கிவிடும், அவ் இரசதம் விளைவின்-அந்த ரஜோ குண மானது விருத்தியாயின், சத்துவ தமங்கள் வீழும்-சத்துவ தமோ குணங்க ளிரண்டும அடங்கிவிடும், ஊழின்-(ஜீவர்களின்) அதிருஷ்ட வசத்தால், இவை இரண்டும்



தாழ்ந்து-இங்கே கூறியபடி ஏனைய விரண்டு குணங்களு மடங்கி, ஒன்று மிக்கு உளது ஆம்-ஒரு குணம் அதிகரித் திருக்கும். எ-று. மற்று அசை. 41

தத் 31 ஒருவழியிதுவா.

### வேதாந்த சூடாமணி 67 வது கவி.

சத்துவ குணத்திற் றேன்றுந் தயங்குமுட் கரண நான்கும்,
புத்தியிந் தியங்க ளைந்தும் போந்துதித் திடுமி ராச,
தத்தில்வாக் காதி யைந்துந் தகும்பிரா ணுதி யைந்து,
மத்தமோ குணத்திற் றேன்று மகல்விசும் பாதி பூதம். 42

### ௸ ௸ 68 வது கவி.

அப்பெரும் பூதம்பஞ்சீ கரித்துல காகி நிற்கும். 42

(இ-ள்) தயங்கும்-விளங்காநின்ற, உள் கரணம் நான்கும்-அந்தக்கரண சதுட்டயமும், புத்தி இந்தியங்க ளைந்தும்-ஞானேந்திரயங்க ளைந்தும், சத்துவ குணத்தில் தோன்றும்-சத்துவ குணத்தில் உற்பந்ந மாம், இராசதத்தில்-இரஜோ குணத்தி னின்றும், வாக்கு ஆதி ஐந்தும்-வாக்காதி கர் மேந்திரியங்கள் ஐந்தும, தகும்-தகுதி யான, பிராண ஆதி ஐந்தும்-பிராணன் முதலிய (வாயுக்கள்) ஐந்தும், போந்து உதித்திடும்-உண்டாகா நிற்கும், அத் தமோகுணத்தில்-முன்னர்க் கூறிய தமோ குணத்தினின்றும், அகல்-விரிந்த, விசும்பு ஆதி பூதம்-ஆகாயம் முதலிய (பஞ்ச) பூதங்கள், தோன்றும்-

உண்டாகாநிற்கும், அப் பெரும் பூதம்-அந்தப் (பஞ்ச) மகா பூதங்கள், பஞ்சீகரித்து-(பரமேசுரனால்) பஞ்சீ கரணம் செய்யப்பட்டு, உலகு ஆகி நிற்கும்-பிரபஞ்ச மய மாகி இருக்கும். எ-று. 42

தத் 31 ஒருவழி யிதுவா.

ஞாந வாசிட்டம் 4 வது தாசூரன் கதை 53 வது கவி.

வான்முதலா மண்முதலா நீர்முதலாந்
தீமுதலா மற்றை வாயுத்,
தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு
மோரொன்று தலைமை யாகும்,
யான்முதலோ ரயன்சிருட்டி சிலேடையா
யுனக்குரைத் தே னிந்த வாற்றான்,
மேன்முதலா நியமமிதற் கொன்றாக
விலதுபல விதமாய்த் தோன்றும், 43

(இ-ள்) வான் முதல் ஆம்-(ஒரு கற்பத்தில்) ஆகாயம் முதலில் சிருட்டி யாம், மண் முதல் ஆம்-(ஒரு கற்பத்தில்) பிருதிவி முன்னர் சிருட்டி யாம், நீர் முதல் ஆம்-(ஒரு கற்பத்தில்) அப்பு முன்னர் சிருட்டி யாம், தீ முதன் ஆம்-(ஒரு கற்பத்தில்) தேயு முன்னர் சிருட்டி யாம், மற்றை வாயு முதல் ஆம்-(ஒரு கற்பத்தில்) வாயு முன்னர் சிருட்டி யாகும், இப்படியே-இவ்வாறே, சிருட்டி தொறும்-சிருஷ்டி தோறும், ஓர் ஒன்று-ஒவ் வொரு பூதம், தலைமை ஆகும்-முதன்மை பற்றிநிற்கும், யான்-யாம், முதல் ஓர் அயன்



சிருட்டி-பிரஜாபதி யென்னும் ஒரு பிரமனது சிருட்டியை, சிலேடை ஆ (க)-திருட்டாந்தப் பொருட் டாக, உனக்கு உரைத்தேன்-(இராகவா) உனக்குக் கூறினேம், இந்த ஆற்றால்-இம் முறை பற்றி, மேல் முதல் ஆம்-மே லாக முத லாகிய, நியமம் இதற்கு-நியமம் இதற்கு, ஒன் றாக இலது-ஒரு முறை யாக வில்லாமல், பல விதம் ஆய்த் தோன்றும்-பற் பல வகை யாகப் பிரதிதி யாம். (எ-று) "வாயுத் தான்" என்பதில், தான் அசை. 43

தத் 41 ஐந்துபூ தமும்பத்.

அஞ்ஞ வதைப் பரணி 9 ஆல் 4 வது கவி.

இரையுமெழு கடலும்வளை யாநின்ற வேழ்புவியு
மெழுமலையு முலகுபதி னாலுந்த னாடுருவு,
வரையுமிரு சுடரடைய வோரண்ட மாகுமிது
வடவிதையி னளவுமில தாலென்கொ லோதுவதே. 44

(இ-ள்) இரையும்-சப்தியாநின்ற, எழு கடலும்-சத்த சமுத்திரமும்-வளையாநின்ற-(அவைகளை) வளைந் துள்ள, ஏழ் புவியும்-எழு (வித மாய் வேறு வேறு யுள்ள) பூமியும், எழு மலையும்-(அவைகளைச் சுற்றி யுள்ள சப்த குல பர்வதங்களும், உலகு பதி னாலும்-(கீ ழேழு மே லேழு மாகிய) பதி னான் குலகங்களும், ஊடுருவும்-(அவைகட்கு மத்தியில்) ஊடுருவி அஞ்சு ராணி போன்றுள்ள, வரையும்-(மகா மேரு) கிரியும், இரு சுடர்-சூரிய சந்திரரும், அடைய-(ஆகிய இவை) அனைத்தும், ஓர் அண்டம் ஆகும்-ஒரு அண்டம் ஆம்,

**இது**—இந்த, வட **விதையின்**-வட ஆல விருக்ஷத்தின் கண் ணுள்ள பழத்தின் விதையினது, **அளவும் இல தால்**—அளவும் இல்லாததால், என் கொல் ஓதுவது—என் னென்று சொல்லுவது. (எ—று) தன் அசை, ஏ அசை "அளவும்" என்ற **உம்மை.** முற்றும்மை. 44

ஷ

**பிரம கீதை 5 வது அத்தியாயம் 38 வது கவி.**

தன்மாத் திரைக ளந்தினையு
மோரொன் றிரண்டாய்ப் பகுத்தொன்றை,
நன்னு லாக்கித் தன்பாதி
யொழிந்த நாலி னுடன்கூட்டி,
யின்னே யல்லா தவைநான்கி
னியல்பிற் கூட்ட வானுதி,
பின்னே தூல பூதமெனப்
பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான். 45

**(இ—ள்)** தன் மாத்திரைகள் ஐந்தினையும்—தன் மாத்திரைகளாகிய பூதங்களைந்தினையும், ஓர் ஒன்று இரண்டு ஆய் பகுத்து—ஒவ்வொன்றை இரண்டு இரண் டாகப் பங்கிட்டு, ஒன்றை—(அவைகளில் ஐந்து அம்ச ங்களை எடுத்து அந்த அம்சங்களுக்குள் ஒவ்வொன்றை, நன் நால் ஆக்கி—நான்கு நான்காகச் செய்து, தன் பாதி ஒழிந்த—தனது பாதியை நீங்கிய, நாலினுடன் கூட்டி—(ஏனைய) நான்கு பூதங்களின் அரைக்கால் பாகத் தினோடு சேர்த்து, இன்னே—இத் தன்மையவாய்,



அல்லாதவை நான்கின்—(தனது பாதி) யல்லாத மற்றைய நான்கு பூதங்களுடன். இயல்பில் கூட்ட—இயல் பாகச் சேர்த்து (இவ்வியல்பாகப் பஞ்சீகரணஞ் செய்ய), பின்—(அதன்) பின்பு, வான் ஆதி தூல பூதம் என—ஆகா சாதி தூல பூத மாக. பிறக்கும் என—உண்டாகு மென்று, பெயர்த்து உரைத்தான்—திரும்பவுங் கூறி னன். எ—று. ஏ ஏ அசை. 45

**தத் 43 சீரிய வீச னார்க்குஞ்.**

**வாசிட்டம் 6 நிருவாணப் பிரகரணம் 36 வது கவி.**

செயலின் உரிய. 46

இதன் பொருள், செயலின்—உரிய. எ—று. 46

**தத் 44 மரங்கள்போல்.**

**வேதாந்த சூடாமணி 48 வது கவி.**

மிகுமரப் பன்மை தண்டலை யெனல்போன்
மிகுமுயி ரெலாமுனை னெனுமோர்,
தகுமபி மாநமிறைசமட் டியதாந்
தனித்தனி மரம்பெயர் கொளல்போற்,
பகு முட ரேறும் வேறுவே ருகப்
படுமபி மாநமோர்ந் துரைப்பிற்,
றெகுமுயிர் வியட்டி யுருவமென்
குவமேற் றெம்பத் விலக்கிய முரைப்பாம். 46

(இ-ள்) மிகு மரப் பன்மை-அடர்ந் துள்ள பல மரக் கூட்டங்களை, தண்டலை எனல் போல்-வந மென்று சொல்லுவது போல, மிகும் உயிர் எலாம்-மேன்மை பொருந்திய சகல ஜீவர்களையும், முன் நான் எனும்-முன்னர் அகம் என்னும், ஓர் தகும் அபிமாநம்-ஒப்பற்ற தகுதி யான அபிமாநத்தை, இறை சமட்டியது ஆம்-ஈசுவரனது சமஷ்டி ரூப அபிமாந மாம், தனித் தனி-வெவ் வேறாக, மரம் பெயர் கொளல் போல்-மரங்களின் பெயர்களைச் சொல்லுவது போல, பகும் உடல் தோறும்-வேறு வேறான சரீரங்கள் தோறும், வேறு வேறு ஆகப்படும்-பிருதக்கு பிருதக் காக உண் டாகின்ற, அபிமாநம்-அபிமாநத்தை, ஓர்ந்து-விசாரித்து, உரைப்பில்-சொல்லுமிடத்து, தொகும்-தொகுதி யான, உயிர்-ஜீவர்களின், வியட்டி உருவம்-வியஷ்டி சொரு பம், என்குவ-என்று கூறுவார்கள், மேல்-மேலே, தொம் பத இலக்கியம்-தொம் பத இலக்ஷியார்த்த கூடஸ் தனைக், உரைப்பாம்-கூறு வாம். எ-று. 46

தத் 45 கற்பனை வந்த வாறு.

**ஞாந வாசிட்டம் 4 வது பிரகரணம் தாசூரன் கதை 42 கவி.**

வானநிக ராமனைத்துங் கற்பனைமாத்
திரம்வாளா வளரா நிற்கு,
மானசக நநவுதனிற் கனவுபோ
லிராகவனே யறிதி யன்றே,
யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை
யெவ்விடத்து மொன்று மென்றும்,



ஞாநபர மார்த்தத்தா லிவையெல்லாம்
பொய்யாக நண்ணு மன்றே. 47

(இ-ள்) வாநம் நிகர் ஆம் அனைத்தும்-ஆகாச சதிருச மாக யாவுமே, கற்பனை மாத்திரம்-கற்பனை மாத்திர மாய், வாளா வளரா நிற்கும்-வீணாகவே விருத்தி யடையா நிற்கும், ஆன சகம்-தோற்றரவான வுலகத்தை, நனவுதனில் கனவு போல்-சாக்கிரத்தின்கண்ணே சொப் பநம் போல, இராகவனே-(மகா மதிமா னாகிய) இராமச் சந்திரா, அறிதி-(நீ) தெரிந்து கொள்ளுதி, எவ் விடத்தும்-எங்கும், என்றும்-எப்போதுமே, ஒன்றும்-ஒரு பொருளுமே, ஈநம் உறப் பிறப் பில்லை-இழிவை யுடைய ஜநந மில்லை, இறப்பு இல்லை-மரண மில்லை யாம், ஞாந பரமார்த்தத்தால்-உண் மை யான திருஷ்டியினால் (விசாரிக்கில்), இவை எல்லாம்-இவை யாவுமே, பொய் யாக நண்ணும்-மித்தை யாகப் பொருந் துறும். எ-று. "நனவு தனில்" தன் அன்று ஏ அன்று ஏ அசை நிலை. 47

தத் 46 அரவன்று.

**வாசிட்டம் 5 பிரகரணம் மாவலி கதை 45 கவி.**

வருங்கற் பகவின் விரைந்தேக
வந்தேன் பலசொல் லியும்பயனென்,
சுருங்கச் செல்லும் பயன்கேளாய்
தோன்ற விளங்குள் ளதுவுஞ்சித்,
தொருங்கப் புறத்துஞ் சித்தெல்லை
யுள்ள துஞ்சித் தெல்லையற,

நெருங்குற் றதுஞ்சித் தியான்சித்து
நீசித் துலக நிறைசித்தே. 48

(இ-ள்) வரும் கற்பக விண்-(சகல வளப்பங்களும் மேன் மேலு முண்டாம் கற்பக நிறைந்து இலங்கும் ஆகாச மார்க்க மாக, விரைந்து ஏக வந்தேன்-சீக்கிரத் திற் செல்ல வந்தேன், பல சொல்லியும் பயன் என்-அநேக முபதேசித்தும் பிரயோஜந மென்னே, சுருங்கச் செல்லும் பயன் கேளாய்-சங்கிரக மாக உபதேசிக்கும் பய னுன தன்மையைக் கேட்குதி, தோன்ற இங்கு உள்ள துவும்-புலப்பட இவ ணிருப்பதுவும், சித்து-அறிவே யாம், ஒருங்கு அப்புறத்தும் சித்து-இவ் வியா வற்றிற்கும் அப்பா லும் அறிவே யாம், எல்லே உள்ள தும் சித்து-எல்லேயாக வுடையதும் சித்ரூபமேயாம், எல்லே யற நெருங் குற்றதும்-எல்லேயில்லாமல் விரிந் துள்ள தும் சித்து அறிவேயாம், யான் சித்து-(ஆசாரிய னுகிய) யாமும் அறிவே யாம், நீ சித்து-(சீட னுகிய) நீயும் சித் ரூபமே யாகும். உலகம் நிறை சித்து-ஜகத் பூரண மாகிய சித் ரூபமே யாகும். எ-று. ஏ அசை. 48

ஷ

## வாசிட்டம் 5 பிரகரணம் மாவலி கதை 47 கவி.

என்று வெள்ளி யேகியபின்
னெல்லா மறிவா முலகினேப்பார்த்,
துன்னு வொக்கு மொக்குமெனக்
குசனு வுரைத்த துண்மையதே,
முன்னு மவனி சித்துலகு
மூன்றுஞ் சித்து நான்சித்து,



நன்னு லான திசைசித்து
நாட்டு கின்ற தெலாஞ்சித்தே. 49

(இ-ள்) என்று வெள்ளி ஏகிய பின்-என்று இவ் வண்ணம் உபதேசித் தருளி சுக்கிர பகவான்சென்ற பின்பு, உலகினை எல்லாம்-சகல லோகங்களேயும், அறி வாம் பார்த்து-சித்தாகவே பார்த்து, உன்னு-ஆலோசித்து, ஒக்கும் ஒக்கும்-பொருந்தும் பொருந் தும், எனக்கு உசனு உரைத்தது-எனக்கு சுக்கிராசாரி யார் உபதேசித் தருளியது, உண்மையதே-சத்தியமே யாம், முன் ஆம் அவனி சித்து-எதிரில் புலப்படும் திரு சியம் யாவும் அறிவேயாம், உலகம் மூன்றும் சித்து-சுவர்க்க மத்தியபாதாள மாகிய மூன்றுலகங்களும் சித்தே, நான் சித்து-(காணும்) யான் அறிவுருவமே, நல் நால் ஆன திசை-அஷ்ட திக்குகளும், சித்து-சித்தே யாம், நாட்டு கின்றது எலாம்-எல்லாப் பொருள்களுமே, சித்தே-சித்தே யாம். எ-று. 49

நத் 48 நூடண தமத்தில் வந்த.

## ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் இதோபதேசம் யோக சந்த பூமிகை 52 கவி.

தொலேவில் பொருளியா வையுமாகித்
துன்னி யொன்ரு மிச்சை. 50

(இ-ள்) தொலேவு இல்-அளவிடக்கூடாத, பொருள் யாவையும் ஆகி-எல்லாப் பொருளு மாய்,

துன்னி-பொருந்தி, ஒன்று ஆம் ஏக மாகிய, இச்சை-ஆசை, எ-று. 50

ஷ

## ஞாந வாசிட்டம் 6 நிர்வாணப் பிரகரணம் இக்ஷுவாகு கதை 29 கவி.

அதுதா னறியார்க் கிடர்நல்கி
யதுவே யதுவல் லாததுபோற்,
நிதமாய் நிற்கு மிம்மாயைச் சித்தி ரந்தா னற்புதமே,
பொதுவா யங்க மத்தனையும்
புணர்ந்து பிறிவற் றிருக்கவுந்தா,
னிதமா யுயிரை யுயிர்
திருக்க மயக்கு மியாரையுமே. 51

(இ-ள்) அது தான்-(தோன்றிய) அம் மாயையே, அறியார்க்கு-தெரியாதவர்கட்கு, இடர் நல்கி-துன்பத்தைக் கொடுத்து, அதுவே அது அல்லாதது போல்-அது தானே அது அல்லாதது போல, நிதம் ஆய் நிற்கும்-நிலை பெற்றதாய் நிற்கும், இம் மாயைச் சித்திரம்-இம் மாயையின் வைசித்திரிய மானது, அற்புதமே-(மிகவும்) ஆச்சரிய மானதே, பொது ஆய்-சாமாந்ய மாய், அங்கம் அத்தனையும்-அவயவங்கள் அவ் வளவும், புணர்ந்து-சம்பந்தித்து, பிறிவு அற்றிருக்கவும்-வேறுபா டற்றிருக்கவும், இதம் ஆய்-அநுகூல மாய், உயிரை உயிர் காணாது-ஆந்மாவை ஆந்மாக் காணாது, இருக்க-இருக்கும்படி யாக, யாரையும்-யாவரையும், மயக்கும்-பிரமிக்கச் செய்யும். எ-று.
தான் தான் ஏ அசை. 51



தத் 53 கேவல நிலை.

## ஞாந வாசிட்டம் 4வது பிரகரணம் கசன் கதை 7 கவி.

நாமுட லென்னும் மாசான் ஞாநக்கண் குருடாய்ப்
போகும். 52

(இ-ள்) உடல் நாம் என்னும் மாசால்-தேகோகமென்னும் படலப் பூச்சினால் (பாவனையால்), ஞாநக் கண்-உணர்வு விழி, குருடு ஆய் போகும்-மூடப் பெற்றுப் போம். எ-று. 52

ஷ

## ஞாந வாசிட்டம், 4 திதிப் பிரகரணம் வீம பாச திடர் கதை 13 கவி.

கரசர ணாதி மட்டா நானிவ னென்று காணும்,
திரமது தானே மூன்று மகங்கரஞ் செகத்தோர்க் கெல்லாம்,
உரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு,
மரமெழு மூல மாகும். 53

(இ-ள்) கர சரண ஆதி மட்டுஆம் இது-கை கால் முதலிய மாத்திர மாகிய இத் தேகமே, நான் என்று காணும்-அகம் என்று பார்க்கும், திரமது தானே-இந் நிச்சய வடிவ மித்யா அபிமாநமே, மூன்றும் அகங்காரம்-திருதிய அகங்கார மாகும், செகத்தோர்க்கு

எல்லாம்-பிரபஞ்சத்தி லுள்ள யாவர்க்கும், உரியது ஆம்-இது லௌகிகமே யாகும், மிகவும் பொல்லாது-அத்தியந்தம் துராத்மா வாம், உற்பவம் என்னும்-(ஜநந) சம்சாரம் என்னும், நச்சு மரம் எழும்-விஷ விருக்ஷம் விருத்தியாவதற்கு, மூலம் ஆகும்-காரணம் ஆகும். எ-று. 53

தத் 54 தோற்றமாஞ் சத்தி

பாகவதம் 9வது ஸ்கந்தம் 11 அத்தியாயம் 9 கவி.

மாநுட வாக்கை யென்னு மருவருந் தேரணி பெற்று,
மூநமில் குரவன் சொல்லா மோடமுய்ப் பவனே டென்சீ,
ரானதோ ரநுகூ லக்கா லணுகவும் பிறவி வேலை,
தானொழி தரவெண் ணுதான் றன்னையே கொல்கின் றுனும். 54

(இ-ள்) மாநுட ஆக்கை என்னும்-மநுட சரீரமென்னும், மருவு அரும்-கிடைத்தற் கரிய, தோணி பெற்றும்-தெப்பத்தை அடைந்தும், ஊநம் இல்-உத்க்ருஷ்ட மான, குரவன் சொல்லாம்-ஆசிரியரது உபதேச மாகிய, ஓடம் உய்ப்பவனோடு-ஓடத்தைச் செலுத்தபவனேடு, என் சீர் ஆனது ஓர்-எனது சிறப்புப் பொருந்திய ஒப் பற்ற, அநுகூலக் கால்-அநுகூல மாகிய வாயுவை, அணுகவும்-அடைந்தும், பிறவி வேலை-ஜநந சமுத்திரத்தை, தான் ஒழி தர எண்ணு தன்-நிவிர்த்தி செய்து கொள்ள எண்ண மின்றியவன், தன்னையே-ஆத்மாவையே, கொல்கின்றுன் ஆம்-அத்தி



செய்கின்றுன். எ-று. "பெற்றும்" என்ற உம்மை "அணுகவும்" என்ற உம்மை. இழிவு சிறப்பு. 54

தத் 55 சுழுத்தியிற் பிரள யத்திற்.

ஞாந வாசிட்டம் 6 உற்பத்தி பிரகரணம்
3 ஞாந விண்மகன் கதை 6 கவி.

மண்டிய சுழுத்தி தன்னில் வருகநாப் போவ தென்னக்,
கண்டன வுலக மெல்லாங் கற்பனை முடிவிற் போக. 55

(இ-ள்) மண்டிய சுழுத்தி தன்னில்-நெருங்கிய துயலின்கண் (நித்திரைத் தோடவயத்தால்), வரு கநாப் போவது என்ன-வராநின்ற சொப்பநம் மறைந்து போவது போல், கண்டன உலகம் எல்லாம்-திருசிய மாய்த் தோற்றும் ஜகங்க ளெல்லாம், கற்பனை-கற்பனை யானது, முடிவில் போக-அவசாநத்தில் அழிந்து போக. எ-று. "சுழுத்தி தன்னில்" என்பதில், தன் அசை. 55

தத் 55 சுழுத்தியிற் பிரள யத்திற்.

ஞாந வாசிட்டம் 6 நிர்வாணப் பிரகரணம் 4 புசுண்டர் கதை 21 கவி.

அகல்வா தனையின் வித்தான வந்தச் சுழுத்தி வீடளியாப்,
புகல்வித் தல்லா வாதனையே துரியம் பொன்று வீடளிக்கும். 56

(இ-ள்) அகல் வாதனையின்-விஸ்தாரமான வாசனையின், வித்து ஆன-பீஜ மான, அந்தச் சுழுத்தி-அந்த

நித்திரை. வீடு அளியா—மோக்ஷத்தைக் கொடுக்க மாட்டாது, புகல் வித்து அல்லா—சொல்லாநின்ற நிர் பீஜ மான, வாதனையே—வாசனையே, துரியம்-துரிய மாம், பொன்ரு வீடு அளிக்கும்—கெடாத மோக்ஷத் தைக் கொடுப்பதுவு மாம். எ—று 56

ஷை

பாகவதம் 11 ஸ்கந்தம் 4 அத்தியாயம் 2 கவி.

தரைபுனல் கனல்கால் வாநந் தபநன்வெண் டிங்கள் வாரி,
வரையுறை யரவு மான்கான் வருகரி பதங்க மீந,
முரலளி கணைசெய் கின்ருேன் மொய்குழற் குமரி தேனீ,
யுரைதரு புறவு தாசி யூன்கவ ரன்றி ஞகம். 57

(இ—ள்) தரை—பூமியும், புனல்—ஜலமும், கனல்—அக்நியும, கால்-வாயுவும், வாநம்—ஆகாயமும், தப நன்—சூரியனும், வெண் திங்கள்—தாவள்ய மான சந்திர னும், வாரி-சமுத்திரமும், வரை உறை அரவு—மலை வாச மான அஜகரமும் (மலைப் பாம்பும்), மான்—மானும், கான் வரு கரி—காட்டில் வரும் யானையும், பதங்கம்—விட்டிலும், மீநம்-மீனும், முரல் அளி—சத்திக்கா நின்ற வண்டும். கணை செய்கின்ருேன்—அம்பு செய்ப வனும், மொய் குழல்—தைல மூட்டிய கூந்தலை யுடைய, குமரி—(கன்னிப்) பெண்ணும், தேன் ஈ—தேன் ஈயும்' உரை தரு புறவு—சொல்லாநின்ற புருவும். தாசி—தாசி யும், ஊன் கவர் அன்றில்-மாமிசம் புசிக்கும் அன்றில் பக்ஷியும், நாகம்—சர்ப்பமும். எ—று. 57



தத் 56 சுழுத்தியிற் பிரள யத்திற்.

ஷை ஷை 3 கவி.

உறைத்தநூற் சிலந்தி மைந்த னூதுவன் டெகுத்த கீடஞ்,
சிறந்தன விவைநான் காறுஞ் சிந்தையிற் குருவென் ருக்கி,
மறந்தரு மிஃது தீதா மற்றிது நன்ரு மென்றிங்,
கறிந்தன னின்ப முற்றே னவ்வகை யரச கேண்மோ. 58

(இ—ள்) உறைந்த நூல் சிலந்தி—பொருந்திய நூலுண்டாகச் செய்கின்ற சிலந்திப் பூச்சியும், மைந்தன்—குழந்தையும், ஊது வண்டு எடுத்த—ரீங்காரம் செய்கின்ற வண்டு (கொட்டிப் பார்த்து) எடுத்த, கீடம்—புழுவும். சிறந்தன இவை—சிறப்புப் பொருந்திய இவை, நான்கு ஆறும்—இரு பத்து நான்கினையும், சிந்தையில்—மநதில். குரு என்று ஆக்கி—குரு வாகக் கொண்டு, மறம் தரும்—பாபத்தைத் தரத் தக்க, இஃது தீது ஆம்—இது குற்ற மாம், இது நன்று ஆம்—இது குண மாம், என்று—என, இங்கு அறிந்தனன்—இவ் விடத்து உணர்ந்தேன், இன்பம் உற்றேன்—(அதனுல்) ஆநந்தம் அடைந்தேன், அவ் வகை—அந்தத் தன்மையைய, அரச—(யது மஹா) ராஜனே, கேண்மோ—கேட்பாயாக. எ—று. மற்று அசை. 58

தத் 55 சுழுத்தியிற் பிரள யத்திற்.

பாகவதம் 11ஸ்கந்தம் 4 அத்தியாயம் 44 கவி.

வாக்கி னைக்கடந் தோங்கிமற் றெங்கனு,
நீக்க மின்றிநி றைந்தவ றிவினை,

யூக்க முற்றுணர் தற்கிட ஞகலி,
ஞக்கை யுங்குரு வாயத ரசனே. 59

(இ-ள்) அரசனே-(யது மஹா) ராஜனே, வாக்கினைக் கடந்து ஓங்கி-அவாங் மாநச கோசர மாய், மற்று எங்கணும்-மற் றெவ்விடங்களிலும், நீக்கம் இன்றி நிறைந்த-குறை வின்றிப் பூரணமா யுள்ள, அறிவினை-ஆந்மாவை, ஊக்கம் உற்று-முயற்சியோடுகூடி, உணர்தற்கு-அறிதற்கு, இடன் ஆகலின்-ஸ்தாநமா யிருத்தலின், ஆக்கையும்-சரீரமும், குரு ஆயது-குரு வாக வுள்ளது. எ-று. "ஆக்கையும்" என்ற உம்மை. இழிவு சிறப்பு. 59

தத் 57 இம்பரி னஞ்சை.

ஞாந வாசிட்டம் 6 வது நிர்வாணப் பிரகரணம்
தேவ பூசை கதை 56 கவி.

கருதி மலத்தான் மலமறுக்குங் காரு வென்ன மாயைதனைப்,
பெருமா யையினுற் செறல்வேண்டும். 60

(இ-ள்) கருதி-ஆராய்ந்து, மலத்தால் மலம் அறுக்கும்-(க்ஷார மண் முதலிய) அழுக்கால் அழுக் கெடுக்கும், காரு என்ன-வண்ணுன் போல, மாயைதனை-(அசுத்த) மாயையை. பெரு மாயையினுல்-(சுத்தப்) பிரமாகார விருத்தியினுல், செறல் வேண்டும்-துவம்சம் செய்தல் வேண்டும். எ-று. "மாயை தனை" என்பதில், தன் அசை. 60

ஷி



தத்துவ ராய ஸ்வாமிகள் பாடு துறை 56 வது அக்கைச்சி.

பிணஞ்சுடு தடியென்ன வென்னைக்கொண்டே
பெரும்பற்றை யெல்லாம றச்சாடி,
யணைந்தவென் னையுமப் படியிறில்போ
தத்தில் விட் டநுபோகத் திருந்தானே. 61

(இ-ள்) பிணம் சுடு தடி என்ன-சவத்தைத் தகிக்கச் செய்கின்ற தடியைப் போல, என்னைக் கொண்டே-(ஜீவாந்மா வாகிய) என்னைக்கொண்டே, பெரும் பற்றை எல்லாம்-பெரிய பற்றுக்க ளனைத்தினையும், அறச் சாடி-அத்தியந்தங் கெடுத்து, அப்படி அணைந்த என்னையும்-அப்படி பத மடைந்திருந்த என்னையும், ஈறு இல்-நாச மில்லாத, போதத்தில் விட்டு-ஞாந மடையப் பண்ணி, அநுபோகத்து இருந்தான் (சமாதியில்) அநுபூதிமய மாகவே இருந்தான். எ-று. அநுபவம் என்பது. அநுபோகம் எனத் திரிந்தது. 61

தத் 66 பூர்சிய வீசன்.

திரு நாவுக் கரசு சுவாமிகள் தேவாரம் தனித் திருச் செந்தொகை 10.

விறகிற் றீயினன் பாலிற்ப டுநெய்போன்,
மறைய நின்றுளன் மாமணிச் சோதியா,
னுறவு கோனட்டு ணர்வுக்க யிற்றினுன்,
முருக வாங்கிக்க டையமுன் னிற்குமே. 62

(இ-ள்) மா மணிச் சோதியான்-மிகுந்த இரத்திநம் போன்ற பிரகாச முடைய பரசிவன், விறகில் தீயினன்-

காஷ்டத்தில் மறைந் துள்ள அக்கினியைப் போலவும், பாலில் படு நெய் போல்-பாலினுள் மறைந் துள்ள நெய்யைப் போலவும், மறைய நின்றுளன்-மறைந்து இருக்கின்றனன், உறவு கோல் நட்டு-(அப்படிப்பட்ட பரசிவனே) பக்தி யாகிய கோலை யூன்றி, உணர்வு கயிற்றினல்-ஞான மாகிற கயிற்றினல், முருக வாங்கி கடைய-வேக மாக இழுத்து மதநம் செய்ய, முன்னிற்கும்-பிரத்யக்ஷ மாவன். எ-று. ஏ-அசை. 62

தத் 69 சத்தொடு சித்தா.

**ஞாந வாசிட்டம் 3 வது உற்பத்திப் பிரகரணம் 28 வது கவி.**

மூகமாய்ச் சடமாய்ச் சுகாசுகங் களிலே
மூழ்கியோர் பயனற வருந்துந்,
தேகமார் நீயா ரகோவகோ வீதோர்
சித்திர மிகுந்தவா காணு,
யேகமாய் மெய்யா யிலங்கிய பிரம
மெங்குமா யிருக்கவுந் தோன்ருச்,
சோகமாய்ப் பொய்யாய் விளங்குரு மாயை
தோன்றுரு திருக்கவுந் தோன்றும். 63

(இ-ள்) சடம் ஆய் மூகம் ஆய்-அறி வற்றதாய் ஒன்றுந் தெரியாததாய், சுக அசுகங்களிலே மூழ்கி-இன்ப துன்பங்களிலே அழுந்தி, ஓர் பயன் அற வருந்தும்-யா தொரு பிரயோஜநமு மில்லாமல் துன்புறும், தேகம் ஆர் நீ யார்-உடல் யார் நீ யார், அகோ அகோ-அந்தோ அந்தோ, ஈது ஓர் சித்திரம்-இஃது ஒரு விசித்திரம், இருந்த ஆ(று) காணுய்-இருந்த வாறு காண்பாயாக, ஏகம் ஆய் மெய் ஆய்-ஒன் ருய் உண்மை யாய், இலங்கிய பிரமம்-ஒளிராநின்ற சிவ ஸ்வருபம், எங்கும் ஆய் இருக்கவும்-எவ்விடத்திலும் (சத்தா ஸ்பூர்த்தியை கொடுத்துக் கொண்டு) இருந்தும், தோன்ரு-(இறையளவும்) இலங்க வில்லை, சோகம் ஆய்-துன்பமய மாய், பொய் ஆய்-மித்தை யாய், விளங்குரு மாயை-தெரிவுரு திருந்த (சம்சார மய அவித்தை), தோன்றுருது இருக்கவும்-பிரதீதியாகத் தகுதியற்றிருந்தும், தோன்றும்-(முன்னர் வந்திருப்பது போல) நடிக்கின்றது. எ-று. 63



தத் 69 சத்தொடு சித்தா.

**பிரம கீதை 3 வது அத்தியாயம் 21 கவி.**

யாதொன் றெலும்பு நரம்புமுத லிந்த வுடம்ப தந்நமய,
ேனது பிராண மயனத்துக் குள்ளாய் வேரு யேயொளிரு,
மோது பிராண மயற்கயலா
யுள்ளா யொளிரு மநோமயனந்,
நீதி யுறவிஞ் ஞாநமய னவனுக் குள்ளாய் நிகழுமால். 64

(இ-ள்) யாது ஒன்று-எது, எலும்பு-அஸ்தியும், நரம்பு முதல்-நரம்பு முதலிய, இந்த உடம்பது-இந்த தூல சரீர மானது, அந்ந மயன்-அந்நமய னுவன், ஓது பிராணமயன்-சொல்லாநின்ற பிராணமய னு னவன், அத்துக்கு உள் வேறு ஆய்-அந்நமயற்கு ஆந்தரமாய், வேருய் ஒளிரும்-விலக்ஷண மாய் விளங்குவன், ஓது பிராணமயற்கு-(முன்) சொன்ன பிராணமயனுக்கு,

உள் ஆய்-ஆந்தர மாய், அயல் ஆய்-அந்நிய மாய், மநோமயன் ஒளிரும்-மநோமயன் விளங்குவன், அந் நீதி உற-(முன்) சொன்ன கிரம மாகவே, விஞ்ஞாந மயன் அவனுக்கு உள் ஆய்-விஞ்ஞாநமயன் மநோ மயனுக்கு ஆந்தரமாய் (அந்நிய மாய்), நிகழும்-விளங்குவன். எ-று. ஏ ஆல்-அசை. 64

தத் 69 சத்தொடு சித்தா.

### பிரம கீதை 3 அத்தியாயம் 22 கவி.

அந்நியமாய் விஞ்ஞாந மயனுக் குள்ளா
மாநந்த மயனந்த மயன்றன் னுள்ளாய்,
மன்னியவப் பிராணமய னலே பூர்ணன்
மநோமயனுற் பூரணன்ம நோம யன்று,
னன்னவகை விஞ்ஞாந மயனுற் பூர்ண
னநந்த மயனுலே யவன்றுன் பூர்ணன்,
றன்னிகரற் றனைத்தினுக்கு முள்ளாய் வேருந்
தற்பரத்தாற் பூர்ணனது தானே பூர்ணம். 65

(இ-ள்) ஆநந்தமயன்—ஆநந்தமயனுனவன், விஞ்ஞாந மயனுக்கு உள் ஆய்-விஞ்ஞாநமயனுக்கு ஆந்தர மாய், அந்நியம் ஆய்-வேருய்விளங்குவன், அந்நமயன்-அந்நமயனுனவன், தன் உள் ஆய் மன்னிய-தனக் குள்ளாகப் பொருந்துகின்ற, அப் பிராணமயனுலே-அந்த பிராணமய கோசத்தினுலே, பூர்ணன்-பூரிக்கப்படுகின்றுன், மநோமயனுல்-மநோ மய கோசத்தினுல், பூரணன்-(அப்பிராணமயனும்)



பூரிக்கப்படுகின்றுன், மநோமயன்-மநோமயனுன வனும், அன்ன வகை-அந்தத் தன்மையாகவே, விஞ்ஞாநமயனுல் பூர்ணன்-விஞ்ஞாந மயனுல் பூரிக்கப் படுகின்றுன், அவன்-அவ் விஞ்ஞாநமயனும், ஆநந்த மயனுலே பூர்ணன்-ஆநந்தமயனுலே பூரிக்கப்படுகின்றுன், தன் நிகர் அற்று-(ஆநந்த மயனும்) தனக்கு ஒப்பில்லாத தாயும், அனைத்தினுக்கும் உள் ஆய்-எல்லாவற்றிற்கும் ஆந்தர மாயும், வேறு ஆம் தத் பரத்தால்-(ஆநந்த மயனுக்கு) அந்நியமாயு முள்ள பிரம மாகிய சாக்ஷியால், பூர்ணன்-(அவ் வாநந்தமயனும்) பூரிக்கப்படுகின்றுன், அது-அப்பிரமமோ வெனில், தானே பூர்ணம்-(மற் ருென்றினுலும் வியாபிக்கப்படாமல்) தானே பூரணமா யிருக்கின்றது. தான் அசை. எ-று. 65

தத் 69 சத்தொடு சித்தா.

### பிரம கீதை 3 அத்தியாயம் 23 கவி.

சச்சி தாநந்த மாகியொன் ரும்பரப் பிரமம்,
புச்ச மென்றுரைத் திடப்படு மிரதமப் பொருளே,
யிச்ச தாநந்த மெய்திய யாவனெவ் விடத்துந்,
துச்ச வாக்கையின் றுயரறுத் தவன்சுகம் பெறுமால். 66

(இ-ள்) சத் சித் ஆநந்தம் ஆகி ஒன்று ஆம்-சச்சி தாநந்த மாயும் அத்துவித மாயு முள்ள, பரப் பிரமம்-பரப் பிரம மானது, புச்சம் என்று உரைத்திடப்படும்-

ஆதார அதிஷ்டானம் என்று சொல்லப்படும், அப் பொருளே இரதம்-அந்தப் பிரமமே (எக்காலத்தும்) ரச வஸ்து வாகும், இச் சதா ஆநந்தம்-இந்தச் சதாநந்த ரச வஸ்துவை, எய்திய யாவன்-அடைந்த சநாதநன் எவனோ, அவன்-அவனே, துச்ச ஆக்கையின்-இழி வான உடலைப் பற்றிய, துயர் அறுத்து-துன்பத்தை ஒழித்து. எவ் விடத்தும் சுகம் பெறும்-எங்கும் சுகத்தைப் பெறுவான், புச்சம்-வால். ஆல் அசை. எ-று. 66

தத் 70 பஞ்சகோ சமும்விட்.

**விவேக சூடாமணி 244 கவி.**

என்னவா சானை நோக்கி யேதமில் சீடன் சொல்வான்,
சொன்னவிப் பஞ்ச கோசஞ் சுத்தமா மித்தை யென்றே
யுன்னிநா னூகத் தாலே யொதுக்கிய பிந்நரையா,
மன்னுசூ நியமே யன்றி மற்றேது மிங்குக் காணேன். 67

(இ-ள்) என்ன-(பஞ்ச கோசங்களையும் விசாரித்துத் தள்ளுவாயாக) என்ற, ஆசானை நோக்கி-ஆசாரியரைப் பார்த்து, ஏதம் இல்-வஞ்சக மில்லாத. சீடன் சொல்வான்-மாணுக்கன் விண்ணப்பஞ் செய்வானுயினன், சொன்ன-(தேவரீர்) கூறிய. பஞ்ச கோசம்-(அந்ந மய முதல் ஆநந்த மய மிறுதி யான) பஞ்ச கோசங்களும், சுத்தம் ஆம் மித்தை என்று-அத்தியந்தம் பொய் யென்று, நான் ஊகத்தாலே உன்னி-அடியேன் யுத்தியினுலே விசாரித்து. ஒதுக்கிய பின்னர்-தள்ளிய பின்னர், ஐயா-குருவே, மன்னு சூநியமே அன்றி-



பொருந்திய சூநியத்தைத் தவிர, மற்று ஏதும்-வேறு யாதும், இங்கு காணேன்-இங்கு கண்டிலேன் (யான்) எ-று. 67

தத் 71 முன்புக ரசமன்.

**விவேக சூடாமணி 246 கவி.**

விரிவகங் கார மாதி விகாரமற் றதன பாவ,
மிருமையா மிவற்றை யெல்லா மிங்கியா துணரு மியாதை,
யொருபொரு ளுணரா தந்த வுணர்வுரு வான சாட்சிப்,
பொருளினை மிகவு நுண்மைப் புந்தியா லுணர்தி மைந்தா. 68

(இ-ள்) மைந்தா-மாணுக்கனே, விரிவு அகங்காரம் ஆதி-விரி வாகப் பொருந்திய அகங்காரம் முதலிய, விகாரம்-விகாரம். அதன் அபாவம்-அதனது இன்மையும் ஆகிய, இருமை ஆம்-இவற்றை-சுக துக்க முதலிய துவந் துவங்களை, எல்லாம்-எல்லாம், இங்கு யாது உணரும்-இவ்விடத்து எந்த ஆந்மா அறியுமோ, யாதை ஒரு பொருள் உணராது-எந்த ஆந்மாவை ஒரு வஸ்துவானும் அறிய முடியாதோ. அந்த-அப்படிப்பட்ட, உணர்வு உருவு ஆன-அறிவு சொரூப மான, சாக்ஷிப் பொருளினை-சாக்ஷி வஸ்துவை, மிகவும் நுண்மைப் புந்தியால்-அதி சூக்ஷ்ம மான புத்தியினுல், உணர்தி-அறிவா யாக. மற்று-அசை. எ-று 68

தத் 72 தூலசூட் க.ம.

**பஞ்ச தசி 1 தத்துவ விவேகம் 3.**

ஒழியொடூறுதியா மோதும் வேத்திய.
மலிதரு நனவிடை வடிவின் வேறதா,
நலிவுசெய் யவற்றின்வே றுகு ஞாநந்தான்,
பொலிதலி னேகமாய் வேறு பூணுமோ. 69

(இ-ள்) ஒலி யொடு ஊறு ஆதியாம்-சத்தத்தோடு பரிச ரூப ரச கந்த முதலியன வாம், ஓதும் வேத்தியம்-சொல்லாநின்ற விஷயங்கள், மலி தரும் நநவிடை-மிகுதி யான சாக்கிரத்தில், வடிவின் வேறது ஆம்-சொருபத்தினால் பிந்ந பிந்நங்க ளாம், நலிவு செய்-துன்பத்தை தருகின்ற, அவற்றின்-அவ் விஷயங்கட்கு, வேறு ஆகும் ஞாநம்-பிந்ந மான ஞாந மானது, ஏகம் ஆய் பொலிதலின்-ஒன் றாய் விளங்குதலின், வேறு பூணுமோ-வேறாகப் பொருந்துமா (பிந்ந பிந்நம் ஆமா). தான்-அசை. எ-று. 69

தத் 72 தூலசூட் சும.

ஷ 1—4.

இன்னதாங் கனவினு மீண்டு வேத்திய,
மன்னுரு நநவிடை மன்னி நின்றிடு,
மன்னதாற் பேதமா மவற்றின் வேதநம்,
பிந்நமன் றேகமாய்ப் பிறங்கும் பெற்றியால். 70

(இ-ள்) இன்னது ஆம் கனவினும்-இது போலவே சொப்பநாவஸ்தையிலும் ஆம், ஈண்டு வேத்தியம்-(கநா அவஸ்தையாகிய) இவ்விடத்து (அஸ்திரமா யுள்ள) விஷயங்கள், மன்னுரு-நிலையாகப் பொருந்தாது, நநவிடை-சாக்கிரத்தில், மன்னி நின்றிடும்-ஸ்திர மாக இருக்கும், அன்னதால்-அக் காரணத்தால், பேதம் ஆம்-வேறுகும் (சாக்கிர சொப்பனங்கட்கு விலக்ஷண மாம், அவற்றின் வேதநம்-அவ் விஷயங்களின் ஞாந மானது, ஏகம் ஆய் பிறங்கும் பெற்றியால்-(ஞாநம் ஞாநம் என்று) ஏக மாய் விளங்கும் தன்மையால், பிந்நம் அன்று-வே றல்ல (ஞாநங்கள் ஒன்றே யாம்) எ-று. 70

ஷ

ஷ 1—5.

துயின்றெழுந் தோனுக்குச் சுழுத்தி காலையி,
லியைந்திடுந் தமவறி வெண்ண மாமதூஉம்,
பயன்றரு மநுபவம் பற்றி வந்ததா,
லயர்தரு தமமப்போ தறியப் பட்டதே. 71

(இ-ள்) துயின்று எழுந்தோனுக்கு-நித்திரையினின்றும் விழித்தவனுக்கு. சுழுத்தி காலையில்-சுழுத்தியவஸ்தையில், இயைந்திடும்-பொருந்தாநின்ற, தம அறிவு-அஞ்ஞாநத்தின் ஞாந மானது, எண்ணம் ஆம்-ஸ்மிருதி யாம், அது-அந்த ஸ்மிருதியும், பயன் தரும்-பிரயோஜநத்தை தருகின்ற, அநுபவம் பற்றி வந்ததால்-அநுபவத்தைப் பொருந்தி உண்டாகின்றதால், அயர் தரு தமம்-மறந் துள்ள அஞ்ஞாந மானது, அப் போது-சுழுத்தி காலத்தில், அறியப்பட்டது-உணரப்படுகின்றது. எ-று. ஏ அசை. 71

தத் 72 தூலசூட் சும.

ஷை 1—6.

அறிவது விடயத்தி னயல்மற் றன்றுகாண்,
பிறவறி வினிற்கநாப் பிறங்கு போதம்போன்,
முறையிதி னறிவுமுப் புரத்து மேகமின்,
நெறிபிற ழாதயற் றிநத்து நிற்குமால். 72

(இ-ள்) அது அறிவு—அந்த ஞாநமானது, விடயத்தின்—விஷயங்களின், அயல்—வேறும், அறிவினின் அன்று—ஞாநத்தினின்றும் வேறு அல்ல, கநா பிறங்கு—சொப்பநத்தில் விளங்குகின்ற, போதம் போல்—ஞாநம் போலவே, இதின்—இந்த, முறை அறிவு—கிரமமாக ஞாநமானது, முப்புரத்தும்—மூன்று அவஸ்தைகளிலும், ஏகம்—ஒன்றே யாம். இந் நெறி பிறழாது—இந்த கிரமந் தவறாது, அயல் திநத்தும்—மறு நாளும், நிற்கும்—இருக்கும். காண் மற்று பிற ஆல் அசை நிலை. எ—று. 72

தத் 72 தூலசூட் சும.

ஷை 1—7.

பேதமாய்ச் சென்றதும் பின்னர்ச் சார்வதா,
மாதமாண் டுகமொடு மருவு கற்பத்துஞ்,
சாதலும் பிறத்தலுந் தணந்த ஞாநமொன்,
ருதலி னிதுசுய மாகுஞ் சோதியே. 73



(இ-ள்) பேதம் ஆய் சென்றதும்—(முன்னர்) பிந்ந பிந்நமாகப் போனதும், பின்னர் சார்வது ஆம்—பின்பு வந்து பொருந்துவதுமாகிற, மாதம் ஆண்டு உகம் ஒடு—மாதம் வருஷம் யுகங்களோடு, மருவு கற்பத்தும்—பொருந்துகின்ற கற்பங்களிலும், சாதலும் பிறத்தலும்—மரித்தலும் ஜநித்தலும், தணந்த ஞாநம்—நீக்கியிருக்கின்ற ஞாநமானது, ஒன்று—ஏகமாக இருக்கின்றது, ஆதலின் இது—இக் காரணத்தால் இவ் வாங்ம ஞாநமானது, சுயம் சோதி ஆகும்—ஸ்வயம் பிரகாச ரூபமாம். ஏ—அசை. எ—று. 73

தத் 74 அறிவுக்கு மறிவு.

பிரம கீதை 4 அத்தியாயம் 6 கவி.

வாக்குமந முங்கண்ணு மற்றுளவிந் தியங்களுமே,
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா,
தாக்கில்பரம் பரனறியிற் ருன்வேரு மறியாதே,
போக்குபொரு ளினும்வேரும் பரனரிய பொருளன்ரே 74

(இ-ள்) வாக்கு மநமும் கண்ணும்—வாக்கும் மநமும் விழியும், மற்று உள இந்தியங்களும்—வேறுள்ள இந்திரியங்களும், நோக்கு அரிய பரஞ் சுடரை—பார்ப்பதற்கரிய பரமசிவனை, நோக்கி யிவை செலமாட்டா—(எதிரிட்டுப்) பார்த்து இவைகள் செல்லமாட்டா, தாக்கில் பரம் பரன்—தொந்தமில்லாத மேலான பரமசிவன், அறியில்—அறியப்பட்டபொருளுக்கும், வேறு ஆம்—

வேருவான், அறியாதே போக்கு-அறியப்படாத, பொருளினும் வேறு ஆம்-பொருளுக்கும் வேருவான், பரன் அரிய பொருள் அன்ருே-அந்தப் பரமசிவன் அறிதற் கரிய அருமை யான பொருள் அல்லவா. தான்-அசை. எ-று. 74

தத் 74 அறிவுக்கு மறிவு.

பிரம கீதை 4 அத்தியாயம் 7 கவி.

வாக்குமநங் கண்செவியான் மன்னிநின்ற பிராணனினல்,
நீக்கியுள கரணத்தா னின்மலன்கோ சரிக்கவுருன்,
பாற்கரனுக் குருவம்போற் பகர்பொருளெ லாந்திகழ்வ,
தாக்கதனைச் சநாதநமாம் பரம்பிரம மெனவறிமின். 75

(இ-ள்) வாக்கு மநம் கண் செவியால்-வாக்கினுலும் மநத்தினுலும் கண்ணினுலும் காதினுலும். மன்னிநின்ற பிராணனினல்-நிலை பெற்றிருக்கின்றபிராணனினுலும், நீக்கி உள கரணத்தால்-(இவை) ஒழிந்த கரணத்தினுலும், நின்மலன்-மலரகிதனுன பரமசிவன், கோசரிக்க உருன்-விஷயீகரிக்கப்படமாட்டான், பாற்கரனுக்கு-சூரியன் ஒளிக்கு முன். உருவம் போல்-சகல ரூபங்களும் (விளங்குவது) போல, பகர் பொருள் எலாம்-சொல்லுகின்ற (வாக்கு மநம் முதலிய) எல்லாப் பொருள்களும், திகழ்வது ஆக்கு அதனை-பிரகாசிப்பதாகச் செய்கின்ற வஸ்துவை, சநாதநம் ஆம் பரம் பிரமம் என-சநாதநமா யுள்ள பரப் பிரம்ம மென்று, அறிமின்-(நீங்கள்) அறியுங்கள். எ-று. 75



ஷி

பிரம கீதை 4 வது அத்தியயாம் 11 கவி.

தர்க்க மாநந் தானெழியத் தாறு யுள்ள பேரொளியை,
மிக்க கருத்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப்,
பொக்கமறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான,
தக்க பிரம தத்துவத்தைக் கண்டா ஞகுந் தாஞக. 76

(இ-ள்) தர்க்க மாநம் ஒழிய-தர்க்கம் வேதப் பிரமாணம் இவைகள் நீங்க, தானுய் யுள்ள பேரொளியை-சுய மாகவே விளங்குகின்ற பிரம்மத்தை, மிக்க கருத்தா ஆகுதலும்-மிகவும் கருத்தா ஆதலும், விடயம் ஆகுதலும் ஒழிய-விஷய மாதலும் நீங்க, பொக்கம் அற வேறு அற-பொய் யில்லாமலும் அந்நிய மில்லாமலும், கண்ட பொழுது-காணும் பொழுது, புரை தீர் பொருள் ஆன-குற்றம் நீங்கிய பொருளாய் விளங்கிய, தக்க பிரம தத்துவத்தை-தகுந்த பிரம தத்துவத்தை, தான் ஆகக் கண்டான் ஆகும்-தானுகவே கண்டவனுவான். தான்-அசை. எ-று. 76

தத் 83 தஞ்சமாங் குருவுந்.

ரிபு கீதை 28 வது அத்தியாயம் நான்கு மகா வாக்கியம் 15 கவி.

தேகமுத னானென்ன றுவித விர்த்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி,
யேகபர நானென்ன லகண்ட விர்த்தி
யிம்மூன்று, விருத்திகளி லிரண்டைத் தள்ளி,
யாகுமகன் டாகார விருத்தி தன்னை
யநவரத மாதரவா யப்பியா சித்துச்,
சோகமுறுஞ் சித்தவிகற் பங்க டீர்த்துச்
சொன்ன வகண் டேகரச சொருப மாவாய். 77

(இ-ள்) தேகம் முதல்-சரீரம் முதலியவற்றை, நான் என்னல்-(அகம்) அகம் என்று கூறுதல், துவித விர்த்தி-துவைத விருத்தி யாம், திகழ் சாட்சி-விளங்குகின்ற கூடஸ்தனே, நான் என்னல்-அகம் என்று உண்டாதல், சாட்சி விர்த்தி-கூடஸ்த விருத்தி யாம், ஏக பரம்-அத்வைத ரூப பிரமம், நான் என்னல்-அகம் என்று உண்டாதல், அகண்ட விர்த்தி-அகண்டாகார விருத்தி யாம், இம் மூன்று விருத்திகளில்-இப் பொழுது கூறிய (துவைத விருத்தி கூடஸ்த விருத்தி அகண்டாகார விருத்தி) மூன்றில், இரண்டை தள்ளி-துவைத விருத்தியையும் கூடஸ்த விருத்தியையும் நீக்கி, ஆகும் அகண்ட ஆகார விருத்தி தன்னை-உண்டாகின்ற அகண்டாகார விருத்தியினை. அநவரதம்-(இடையீடின்றி) நிரந்தரம், ஆதரவு ஆய்-நேயத்தோடும், அப்பியாசித்து-நிதித்தியாசநம் செய்து, சோகம் உறும்-துன்ப முறுகின்ற, சித்த விகற்பங்கள் தீர்த்து-சித்த விக்ஷேபங்களை நீக்கி, சொன்ன-(முன்னர்க்) கூறிய, அகண்ட ஏகரச-அகண்டமாய் அத்வைத மய மான, சொருபம் ஆவாய்-சொரூபம் ஆவா யாக. விர்த்தி தன்னை என்பதில் தன் அசை. 77



தத் 84 அநுபவா நந்த.

வாசிட்டம் 6 வது நிருவாணப் பிரகரணம் இதோபதேசம்
4 வது கவி.

நனவிற் சுழுத்தி நிலைமேவி நன்று யெல்லா முள்ளகற்றித்,
தனதிச் சையில்வந் தது புறத்தே சமைப்பாய்
சித்த முண்டாகை,
கனதுக் கமதாஞ் சித்தமறிற் கனத்த சுகமாஞ் சித்தத்தை,
யுனதுட் படுத்தி யுணர்வின்மை யாலே யொழிப்பா
யுணர்வுருவாய். 78

(இ-ள்) நனவில் சுழுத்தி நிலை மேவி-நனவின்கணே துயின்றவனாகி, நன்று ஆய் எல்லாம் உள் அகற்றி-நல மாக யாவற்றையும் உள்ளே நீக்கி, தனது இச்சையில் வந்தது-தானே வந்ததை, புறத்தே சமைப்பாய்-பாகியத்தே செய்வாய், சித்தம் உண்டாகை-சித்தம் இருத்தலே, கன துக்கமது ஆம்-கொடூர துயரமாம். சித்தம் அறில் கனத்த சுகம் ஆம்-சித்த மில்லாமையே பேராநந்த மாம், சித்தத்தை உனது உட்படுத்தி-சித்தத்தினை உனது வயப்படுத்தி, உணர்வு இன்மையாலே-(அறிவுருவ மான இராகவனே) விருத்திகளை ஒய்வித்தலாலே, ஒழிப்பாய் உணர்வுருவு ஆய்-கெடுப்பாய் சிதேகாந்மாவாய். எ-று. 78

தத் 87 சிட்டனிவ் வாறு.

பிரம கீதை 12 வது அத்தியாயம் 22 கவி.

மாரி போல் மாறு வேண் டாதே, [குரவனே யெவருந்,
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக்
தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர
னென்றிடத் தகுவான். 79

(இ-ள்) மாரி போல் மாறு வேண்டாதே-மேகங்களைப் போல (கைம்) மாறு கருதாமல், மீட்சியில் பதத்தை-திரும்புத லில்லாத பதவியை, கருணையால் அளிக்கும்-திரு வருளால் கொடுத்தருள்கின்ற, வித்தகக் குரவனே-ஞானாசாரியரே, எவரும் தாழ்ச்சி செய்து-எல்லாரும் தாழ்ந்து, ஏத்தற்கு உரிய தத்துவம் ஆம்-துதித்தற் குரிய தத்துவ சொரூபி யாகிய, சங்கரன் என்றிடத் தகுவான்-சங்கர னென்று சொல்லத் தகுவான் எ-று. 79

தத் 92 தத்துவ வநுபோ கந்தான்.

### வேதாந்த சூடாமணி 126 கவி.

பிரமமல னெனென்கை அஞ்ஞானம் நானப்,
பிரமமோ வலனேவென் றிடலையம். 80

(இ-ள்) நான் பிரமம் அல என்கை-நான்பிரமம் அல்ல என்று உண்டாதலே, அஞ்ஞானம்-அஞ்ஞானம் ஆம், நான் அப் பிரமமோ அலனே-யான் அப் பிரம சொரூபமோ பிரம சொரூபம் அலனே, என்றிடல் ஐயம்-என் றுண்டாதலே சந்தேக மாம். எ-று. 80

ஷை



### வாசிட்டம் 5 உபசாந்திப் பிரகரணம் இதோபதேசம் 52 கவி.

தொக்க பிறவித் திரள்கடொறும் தெடர்ந்து
வந்த வாதனைதான்,
மிக்க கால யோகத்தின் பழக்கத் தல்லால் விடாது. 81

(இ-ள்) தொக்க பிறவித் திரள்கள் தொறும்-தொடர்ந்து வந்த வெகு ஜன்மங்களிலும், தொடர்ந்து வந்த வாதனை-பின்பற்றி வந்து கொண்டிருக்கும் வாசனையானது, மிக்க கால யோகத்தின் பழக்கத்து அல்லால்-வெகு கால அப்பியாச யோகத்தா லன்றி, விடாது-க்ஷீண மாகவே மாட்டாது. தான்-அசை. எ-று. 81

தத் 93 எத்தனை நாள்.

### இலக்ஷுணுவிர்த்தி 9 கவி.

ஞானமுதித் ததன்பின் பைங் கோசங் கட்கு
நமை வேருய் மிகவுமறிந் ததுவே போல,
ஞானம்வரு முனுங்கோச மவைக்கு வேருய்
நாமிருந்தோ மென்பதுசித் தித்த லாலும். 82

(இ-ள்) ஞானம் உதித்ததன் பின்பு-(ஆன்ம) ஞானம் உண்டானதன் பின்னர், ஐ கோசங்கட்கு-பஞ்ச கோசங்களுக்கும், நமை வேறு ஆய்-ஆன்மாவை விலக்ஷண மாய், மிகவும் அறிந்ததுவே போல-மிகவும் உணர்ந்தது போலவே, ஞானம் வரும் முனும்-(ஆன்ம) ஞானம் உண்டாதற்கு முன்பும், நாம் இருந்தோம் என்பது-நாம் ஆன்ம ரூபமாகவே இருந்தோம் என்பது, சித்தித்தலாலும்-சித்திக்கின்றதனாலும். எ-று. 82

தத் 93 எத்தனே நாள்.

**ஈசுர கீதை 2 வது அத்தியாயம் 51 கவி.**

எங்குந் தானுய் யாவையுமாய்
நின்றே யொன்ரு யழிவின்றி,
யங்க மொன்றின் றறிவேயாய்
நுண்ணி தாய வருள்வடிவைத்,
தங்கு ஞாந யோகத்தான் முன்பா சரித்துப் பினைவந்தெ,
னங்க மான பேரொளியோ
டொன்றி யானு யடங்கிடுவார். 83

(இ-ள்) எங்கும் ஆய்-சர்வ வியாபக மாய், யாவையும் ஆய் நின்று-எல்லா ரூப மாகவு மிருந்து, ஒன்று ஆய்-அத்வைத மாய், அழிவு இன்றி-நாச ரகித மாய், ஒன்று அங்கம் இன்றி-நிரவயவ மாய், அறிவே ஆய்-ஆந்ம சொரூப மாகி, நுண்ணிது ஆய-அதிசூக்ஷ்ம மான, அருள் வடிவை-ஞாந சொரூபத்தை, தங்கு ஞாந யோகத்தால்-பொருந்தாநின்ற ஞாந யோகத்திஞல், முன்பு ஆசரித்து-முன்னர் அநுஷ்டித்து, பினே வந்து-பின்னர் வந்து, என் அங்கம் ஆன-எனது திவ்விய மங்கள மூர்த்த மான, பேர் ஒளியோடு-பிரமப் பிரகாசத்தோடு, ஒன்றி-பொருந்தி, யான் ஆய் அடங்கிடுவார்-எனது சொரூபத்திலேயே லய மாவார்கள். தான்-அசை. எ-று. 83

தத் 93 எத்தனே நாண்.

**ஈசுர கீதை 2 வது அத்தியாயம் 53 கவி.**



சுத்தனு யொன்ரு யென்னைக் கூடிடுந் தொன்மை யோர்க,
ளெத்தனை நூறு கோடி கற்ட ங்க டாஞ்சென் ருலு,
மெய்த்தக மீளா ரென்றன் விளங்குமெய் யருளா லென்றே,
யித்தகைத் தெனவே வேத மியம்பிடு மென்ரு னீசன். 84

(இ-ள்) சுத்தன் ஆய்-பரிசுத்தனுயும், ஒன்று ஆய்-ஏகனுயும் (உள்ள), என்னை-(பரசிவனுன) என்னை, கூடிடும் தொன்மையோர்கள்-அடையும் பழமை யான பெரியோர்கள், எத்தனை நூறு கோடி-எவ்வளவு அநேக கோடி, கற்பங்கள் சென்ருலும்-கல்பங்களாலுலும், என்-என்னுடைய, விளங்கு மெய் அருளால்-விளங்காநின்ற உண்மை யான கருணையினுல், மெய் தக மீளார்-சத்திய மாக மறு ஜநந மடையார்கள், என்று-என, இத் தகைத்து என-இந்தப் பிரகாரம் என்று, ஈசன்-பரமசிவன், வேதம்-(அநாதி யான) வேதங்கள், இயம்பிடும் என்ருன்-கோஷிக்கும் என்று திருவாய் மலர்ந்தருளினுன். தன் தாம் ஏ அசை. எ-று. 84

தத் 96 க்ரமமா திகள்.

ஞாந வாசிடம் வாசிட்டம் 6வது பிரகரணம் பகீரதன் கதை 32கவி.

**விவாதம்அறு மோநத்தோன்**

இருப்புழி மௌநஞ் சாந்தி சமமெய்தி யிராக மின்றி. 85

(இ-ள்) இருப்புழி-அவ்வாறு இராஜ்ய பரி பாலநம் செய்து கொண்டு) இருக்கும் பொழுது. மௌநம்-

அதிக வார்த்தை யாடாதவ ரைய், சமம் எய்தி—சம திருஷ்டியுடையவ ரைய், சாந்தி—சாந்த மநத்தினையு மடைந்து. இராகம் இன்றி—இச்சை யில்லாமல். எ—று. 85

தத் 96 காமமா திகள்.

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் ஞாந விண் மகன் கதை 37 கவி.

மிகவரு கா மாதிகளாம் விகாரமடைந்
தும்விண்போன் மிகநொய் தானே,
ரகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந்
தவிர்ந்தாலு மழுத்த மற்றோர்,
சகநெறிகள் செய்திடினு மன்னியர்போற்
கண்டுகுளிர் தன்மை சான்றோர்,
திகழ்மநமு நினைவுமிருந் துஞ்சிறிது
மில்லாதோர் சீவந் முத்தர். 86

(இ-ள்) மிக வரும்—பிராரத்த வசத்தால் வாரா நின்ற, காம ஆதிகள் ஆம் விகாரம் அடைந்தும்—இராகத் துவேட பயாதிகளை அடைந்து விகாரப்பட்ட போதினும், விண் போல்—(உள்ளே) ஆகாயம் போல, மிக நொய்து ஆனோர்—மிகவுந் தெளிந்து பற்றற்றவர் சீவந் முத்தர். அகம் எனல் இன்றி—அகங்கிருத பாவ மில்லாமல், செயல்கள் செய்தாலும் தவிர்ந்தாலும்—விவகாரங்களைச் செய்த போதினும் செய்யாத போதினும், அழுத்தம் அற்றோர்—(புத்தியில் யாதொருவிதமான) பற்றற்றவர் சீவந் முத்தர், சக நெறிகள் செய்திடினும்—உலக



பதார்த்தங்கள் யாவற்றாடு வியவகரிப்பவராயினும், அந்நியர் போல்—செய்யாதவர் போலவே, அல்லது, அயலார் பொருள்களில் விவகரிப்பவர் போலவே. கண்டு—எண்ணி, குளிர் தன்மை சான்றோர்—தண்மை வாய்ந்த திண்மையராயினோர் சீவந்முத்தர், திகழ் மநதும் நினைவும்—(சமுசார சம்பந்த மாகி) இலங்கும் சங்கற்ப விகற்பங்களும் பல எண்ணங்களும், இருந்தும்—இருந்த போதினும், சிறிதும் இல்லாதோர்—அற்பமும் இல்லாதவரே, சீவந் முத்தர்—சீவிக்கும் போதே விடுபட்டவர் ஆவர். எ—று. அடைந்தும் என்ற உம்மை. இறந்தது தழீஇய எச்ச வும்மை. 86

ஷ

திரு வள்ளுவர் திருக் குறள் 3 நீத்தார் பெருமை 9 வது.

குணமென்னுங் குன்றேறி நின்றார்—வெகுளி,
கணமேயுங் காத்தலரிது 87

(இ-ள்) குணம்—என்னும்—(சத்துவ) குண மென்று சொல்லப்பட்ட, குன்று ஏறி நின்றார்—பர்வதத்தின் மீது இருப்பவரது, வெகுளி—கோபத்தை, கண மேயும்—(கோப பாத்திரமானவரால்) க்ஷணப் பொழுதேனும், காத்தல்—தடுத்தல், அரிது—அருமை யாம். எ—று. "கண மேயும்" என்ற உம்மை. முற் றும்மை. 87

தத் 96 காமமா திகள்

சுவாநுபவத் திரு வாக்கு முத்தி 142 கவி.

காண்பானுங் காண்பவையைக் காணுமிடத் தேகமதாய்ப்,
பூண்பனவால் வாதனையும் பூண்டிடுமே-வீண்பயிலும்,
வாசனையைச் சித்தத்தில் வையா ததுமுத்தி,
யாசிலிதற் கர்த்தமிதே யாம். 88

(இ-ள்) காண்பானும்-திருஷ்டாவும், காண்பவையை-திருசியத்தை, காணு மிடத்து-திருக்கு ரூபமாகப் பார்க்கு மிடத்து, ஏக மது ஆய் பூண்பனவால்-ஏக மாய்ப் பொருந்தியிருத்தலினால், வாதனையும்-(துன்பமும்) சமஸ்காரமும், பூண்டிடுமே-பொருந்துமே, வீண் பயிலும்-வீணாக அப்பியாசம் செய் துள்ள, வாசனையை-சமஸ்காரத்தை, சித்தத்தில் வையாதது-மநதில் பற்றாததுவே, முத்தி-மோக்ஷ மாம், ஆசு இல் இதற்கு-குற்ற மற்ற இதற்கு, இதே அர்த்தம் ஆம்-இதுவே பொருளாம், எ-று 88

தத் 98 சென்றது கருதார்.

**வாசிட்டம் 5 பிரகரணம் வீதகவ்வியன் கதை 27 கவி.**

இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொரூப
மிவ்வண்ணம் பலசத்தி யிலங்கும். 89

(இ-ள்) இது எனத் தோன்றிய எல்லாம்-(இது) இது என்று புலப்படும் யாவுமே, சித் சொரூபம்-அறிவு ரூபம் ஆகும், இவ் வண்ணம்-இந்தப் பிரகாரம், பல சத்தி இலங்கும்-பல சத்திகள் நிகழும். எ-று. 89



தத் 98 சென்றது கருதார்.

**பிரம கீதை 4 வது அத்தியாயம் 24 கவி.**

செப்புநா மத்தா லுண்மையா லெல்லாத்
திகழ்வுமா தேவனே யாகி,
லிப்படி யறிந்த ஞாநிகைக் கொள்வா னெத்தையன்
றெனவெத்தை விடுவான். 90

(இ-ள்) செப்பு நாமத்தால்-சொல்லுகின்ற நாமத்தினாலும், உண்மையால்-(அதன்) உண்மைப் பொருளாலும், எல்லாத் திகழ்வும்-சகல பிரகாசமும், மாதேவனே யாகில்-பிரபு வாகிய மகாதேவரது விளக்கமே யாகுமானால், இப்படி அறிந்த ஞாநி-இவ் விதமாக உணர்ந்த ஞாநி யானவன், எத்தைக் கைக் கொள்வான்-எந்தப் பொருளைக் கிரகிப்பான், எத்தை-எந்தப் பொருளை, அன்று என விடுவான்-கிரகிக்கத் தக்க தன்று என்று தள்ளுவான். எ-று. 90

ஷ

**ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் ஜநகன் கதை 32 கவி.**

வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்து வந்து,
தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச்
சநக னெண்ணி,
தீனேய வருகாலஞ் செல்கால மிமையளவுஞ்
சிந்தை செய்யா,
னானேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலோ
டுலாவ லுற்றான். 91

(இ-ள்) வான் ஏகு கதிர் இரவி—ஆகாயத்தில் கமனஞ் செய்யும் சகஸ்திர கிரணங்களை யுடைய சூரியன், நாள் இயற்றும் வாறு என்ன—தினஞ் செய்யும் முறை போல, தானே வந்து வந்து—(பிராரத்த வசத்தால்) தானே வந்து வந்து, தோன்றிய தொழிலே—பிரதீதி யாகிய காரியங்களை, பற்று இன்றி—வாசனைக் கிட மில்லாமல், செய்தும் என—செய்வோம் என்று, சநகன் எண்ணி—ஜநக மகா ராஜா சிந்தித்து, தீன் நேய வரு காலம் செல் காலம்—அநுபவிக்கும் படியாக வருங் காலம் சென்ற காலம், இமை அளவும்—அணு மாத்திரமும், சிந்தை செய்யான்—எண்ணுன், ஊன் ஏறு நிகழ் காலத்து—சரீர சம்பந்த மான வர்த்தமாந காலத்தில், ஓர் இமைப்பில்—நிமிடத்து, நகைதலோடு—புன்னகை யுடன், உலாவல் உற்ருன்—புரித லாயினுன். எ—று. 91

தத் 99 பின்னேமூ வரி.

வாசிட்டம் 3 வது உற்பந்திப் பிரகரணம் இதோபதேசம் 48 கவி.

அறைந்தபத மைந்தாலுந் தானும் போதத்
தழுந்தியவின் பத்தமைவாற் புறனு முள்ளு,
மறைந்தபதார்த் தங்கண்மறந்தயலோர் வன்பா
லுணர்வதுவே பதார்த்தநினை வொழித லாகு,
நிறைந்தவிவை யாருலும் பேதம் போக்கி
நிலைபெறுதற் சுபாவத்தே நிற்ற லுனே,
மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகு
மாசறுசீ வனின்முத்தர் வழியி தாகும். 92



(இ-ள்) அறைந்த பதம் ஐந்தாலும்—(முன்னர்க்) கூறிய ஐந்து பூமியின் அப்பியாசத்தாலும், தான் ஆம் போதத்து அழுந்திய—சுவாத்ம ஆராமத் தன்மையாலே, இன்பத்து அமைவால்—ஆநந்தத்தின் திடமாக, புறனும் உள்ளும்—வெளியிலும் உள்ளிலும், உறைந்த—உள்ள, பதார்த்தங்கள் மறந்து—பொருள்களின் பாவனை யின்மை யின், அயலோர் வன்பால்—அந்நியராற் செய்யப் பட்ட நீண்ட யத்தநத்தினுலே, உணர்வதுவே—அறிவதுவே, பதார்த்த நினைவு ஒழித லாகும்—பதார்த்தா பாவனை என்னும் ஆருவது பூமியாம், நிறைந்த இவை ஆருலும்—பூரண மான இந்த ஆறு பூமிகளின் அப்பியாசத் தால், பேதம் போக்கி—வேற்றுமை தோற்ருமல் மாற்றி, நிலைபெறு தன் சுபாவத்தே—நிலைபெற்ற தனது சுபாவீக மாக, நிற்றல் தானே—நிஷ்டத்துவமே, மறைந்த பொருள்—மறைபட்ட பதார்த்தத்தை, வெளி ஆக்கும் துரியம் ஆகும்—வெளிப்படுத்துந் துரிய கதி யாம், மாசு அறு—களங்க மற்ற, சீவனின் முத்தர்—சீவந் முத்தர் களிடத்தில், வழி ஈது ஆகும்—இதுவே துரியாவஸ்தை யீண் டுள்ளது. எ—று. 92

தத் 99 பின்னேமூ வரி.

பாகவதம் 11 ஸ்கந்தம் 6 அத்தியாயம் 11 கவி.

சாற்றிய குணமு மர்க்கையு மநமுந்
தானல வென்பதை யுணர்ந்தாற்,
போற்றிய வாக்கை யுடனிருப் பதுவும்
போவது மறிந்திடா ராகி,

யேற்றதம் புயமேற் றுகில்கழி வதுவு
 மிருப்பதும் வெண்ணறை பருகி,
மாற்றரு மதத்தி னறிந்திடா தொழுகு
 மாக்களைப் போலுவர் மாதோ. 93

(இ-ள்) சாற்றிய குணமும்-சொல்லாநின்ற சத்துவ ரஜோ தமோ குணமும், ஆக்கையும்-சரீரமும், மநமும்-மநதும், தான் அல என்பதை உணர்ந்தால்-ஆந்மா வல்ல என்று அறியின், போற்றிய-(முன்பு) பேணிய, ஆக்கையுடன் இருப்பதுவும்-சரீரத்துட னிருப்பதுவும், போவதுவும்-இறப்பதும், அறிந்திடார் ஆகி-அறியாதவர்களாகி, ஏற்றதம் புய மேல்-பொருந்திய தம் தோளின் மேல் உள்ள, துகில் கழிவது வும்-வஸ்திரம் விழுவதையும், இருப்பதும்-இருக்கின்ற தையும், வெண் நறை பருகி-வெண்மையான கள்ளைக் குடித்து, மாற்ற அரும் (மால் தரும்-(நீக்க மின்றி) மயக்கத்தைத் தரும், மதத்தின்-மதத்தினுல், அறிந் திடாது ஒழுகும்-உணராமல் நடக்கும், மாக்களைப் போலுவர்-மநுடர்களைப் போல் நடப்பார்கள். எ-று. மாது ஓ-அசை. 93

தத் 102 சீவன்முத் தரை.

ஞாந வா சிட்டம் 6 பிரகரணம் இக்ஷுவாகு கதை 65 கவி.

போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க்காண,
வாற்ற வுரியோ னெவனவன்வன்
 பிறவி யறுப்போர்க் கநவரதஞ்,



சாற்று மகத்தாற் றீர்த்தத்தாற் றவத்தாற் ருநத்
ஊற்ற வறிவாற் பிறவியறுத் [தாற்கிட்டா,
 துயர்ந்தோன் பத்தி தருர் பயனே. 94

(இ-ள்) பிறவி அறுப்போர்க்கு-ஜநந நிவிர்த்தியை விரும்பினவருக்கு, அநவரதம்-எப்போதும், போற்ற-துதிக்க, வணங்க-நமஸ்கரிக்க, பூசிக்க-பூசை செய்ய, புகழ-கீர்த்திக்க, வருந்திப் போய்க் காண-முயன்று சென்று போய்த் தரிசிக்க, ஆற்ற-(பணி விடை) செய்ய, உரியோன் எவன்-தக்கவன் யாவனு, ஊற்ற அறிவால்-திட ஞாநத்திருலே, பிறவி அறுத்து உயர்ந் தோன் அவன்-ஜநநத்தைச் சிதைத்து மேலானவனுகிய அவனுடைய, பத்தி தரும் பயன்-அன்பு கொடுக்கும் பிரயோஜநமானது, சாற்றும் மகத்தால்-(கரும காண்டம்) விதித்த யாகத்தாலும், தீர்த்தத்தால்-(புண்ணிய) தீர்த்தங்களினுலும், தவத்தால்-(கிருச்சிர சாந்திராயணுதி) தவங்களினுலும், தாநத்தால் (10.16-32) தாநங்களினுலும், கிட்டா-(அடைய) முடியா தாம். எ-று. 94

ஷ

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் காதி கதை 24 கவி.

அதுலமா தவனோ ரங்கைநீ ருணவா யரிமகி
 முருந்தவம் புரிந்தான். 95

(இ-ள்) அதுல மாதவன்-உவமை யில்லாத காதி வேதிய மாதவன், ஓர் அம் கை நீர்-ஒரு உள்ளங் கை

ஜலத்தையே, உணவு ஆய்-ஆகார மாகக் குடித்து, அரி-ஸ்ரீ மந் நாராயணர், மகிழ்-(திருவுள்ளஞ்) சந் தோஷ மடையும் ஆறு, அரும் தவம் புரிந்தான்-அரிய தவத்தினை யியற்றினன். எ-று. 95

தத் 106 கடமெனு முபாதி.

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் கற் கடி கதை 42 கவி.

சகமாய் நின்றும் புராதநமா மொருமையினிற் பிரியாதாகும்,
பூரணசிந் மாத்திரமாம் பொருளே சொன்னாய். 96

(இ-ள்) சகம் ஆய் நின்றும்-விசுவாத்மகத் தன்மையை யடைந்த போதினும், புராதநம் ஆம் ஒருமையினில்-எப்போது மிருக்கும் ஏக பிண்டத் தன்மை, பிரியாத ஆகும்-கண்டிக்கப்படமாட்டா தாம், பூரண சிந் மாத்திரம் ஆம்-நிறைந்த சத் சிந் மாத்திர சாஸ்வத. பொருளே சொன்னாய்-பிரமத்தையே (ஹே கல்யாணியே, நீ) யுரைத்தனை. எ-று. 97

ஷ

குமார தேவர் செய்த சுத்த சாதகம் 26 கவி.

சூக்குமந் தனது காரண மடையத்
தூலமிங் ககன்றதே யென்றாற்,
சூக்குமந் தனது காரணம் விடுத்துத்
தூலமொன் றெடுத்ததென் றுணர்வாய். 97

(இ-ள்) சூக்குமம்-சூக்ஷ்ம சரீர மானது, தனது



காரணம் அடைய-தனது காரண சரீரத்தில் லய மாக, இங்கு தூலம் அகன்றது-இவ் விடத்து தூல சரீரம் விட்டது. என்றால்-என்று கூறில், சூக்குமம்-சூக்ஷ்ம சரீர மானது, தனது காரணம் விடுத்து-தனது காரண சரீரத்தை விட்டு, ஒன்று தூலம் எடுத்தது-வேறொரு தூல சரீரத்தை அடைந்தது, என்று உணர்வாய்-என்று அறிவா யாக. எ-று. 97

தத் 106 கடமெனு முபாதி.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் புண்ணிய பாவகன் கதை 38 கவி.

காலமே காரணமாய்க் குடும்ப வாழ்விற்
காதலொழித் தறச்செறிந்த காயந் தன்னைச்,
சாலமிகு தொழிற்பறவைக் கிடமாங் கூட்டைச்
சாநவியின் கரைவரையிற் றனே தீர்ந்தான்,
கோலியொரு சுமைசுமப்பான் குறித்த வெல்லை
கொண்டுபோய்ப் போடுவபோற் சுரம்பை போட்டு,
மங்லுறுபற் றென்றின்றிப் பூவி னூற்றம்
வானுறல்போற் பரமபத வாழ்வு பெற்றான். 98

(இ-ள்) காலமே காரணம் ஆய்-காலத்தையே நிமித்த மாகக் கொண்டு, குடும்ப வாழ்வில்-சமுசார வாழ்க்கையில், காதல் ஒழித்து-ஆசையை யகற்றி, அறச் செறிந்த காயந் தன்னை-தவம் புரிந்து ஜரா ஜர்ஜர மாகிய (முற்றிலும் சரை மூடிய) சரீரத்தை, சால

மிகு தொழிற் பறவைக்கு-அத்தியந்தம் அலேயும் வினை (பக்ஷி) விகங்கத்திற்கு, இடம் ஆம் கூட்டை-இடமாகும் நீடத்தை, சாநவியின் கரை வரையில்-கங்கைக் கரை வரைக் குகையில். தானே தீர்ந்தான்-சுயமாகவே விலக்கினுன், கோலி ஒரு சுமை சுமப்பான்-(இன்ன இடத்திற் போடுவ தென்று) நியமநஞ் செய்து கொண்டு ஒரு பாரத்தை எடுத்துச் செல்லுவோன், குறித்த எல்லே கொண்டு போய்-நியமித்த இடத்தில் பாரத்தை யெடுத்துக் கொண்டு சென்று, போடுவ போல்-அடைந்த அந்த இடத்தில் போடுவது போல, குரம்பை போட்டு-(பிராரத்தந் தீர்ந்த உடனே) தேகத்தை விடுத்து, மாலுறுபற்று ஒன்று இன்றி-மயக்கத்தைத் தரத் தக்க யா தொரு வாஞ்சை யு மில்லாதவனுய், பூவின் நாற்றம் வான் உறல் போல்-புஷ்ப கந்தம் ஆகாய மடைவது போல், பரம பத வாழ்வு பெற்ருன்-பரம பத வாழ் வாகிய மோக்ஷத்தை யடைந்தனன். "காயங் தன்னே" என்பதில், தன் அசை. எ-று. 98

ஷை

பிரபு லிங்க லீலே, முந்தாயி யம்மைக்கு பிரபு தேவர் அருளிச் செய்த 12 கதி 9 கவி.

அழிவி லானேய ழிந்தன னென்று நீ,
விழியி னுன்மிக வெள்ளம்பெ ருக்கினே,
கழிவி லாதவா காயங்க ழிந்ததென்,
ெறுழிவி லாமலு ளமெலி வார்கள்போல். 99



(இ-ள்) அழிவு இலானே-நித்தியமா யுள்ள அசகண்ணனே, நீ அழிந்தனன் என்று-(முத்தாயி யம்மையாகிய) நீ (செத்துப்போனுன்) நாச மடைந்தான் என்று, விழியினுல்-(இரு) கண்களினுலும், மிக வெள்ளம் பெருக்கினே-அதிக மாக நீர் வடிக்கின்றனே, கழிவு இலர்த-(அஃ தெது போ லெனில்) நாச மில்லாத, ஆகாயம் கழிந்தது என்று-ஆகாயம் நாச மடைந்த தென்று, ஒழிவு இலாமல்-இடையருமல், உளம் மெலிவார்கள் போல்-மநதில் துக்க மடைபவர் போல (துன் புறுகின்றனே). எ-று. 99

தந் 106 கடமெனு முபாதி.

ஷை ஷை 10 கவி.

சச்சி தாநந்த சங்கர னுகவே,
யச்ச நீங்குபு தன்னேய றிந்தவன்,
துச்ச மாந்துயர்த் தோன்மலி யாக்கையை,
யிச்சி யானதை யானென வெண்ணியே. 100

(இ-ள்) சச்சிதாநந்த சங்கரன் ஆக-சச்சிதாநந்த பரமசிவனுக, அச்சம் நீங்குபு தன்னே-யா தொரு அச்சமுமின்றி ஆந்மாவை, அறிந்தவன்-சாட்சாத்கரித்தவன், துச்சம் ஆம்-அல்பமா யுள்ள, துயர் தோல் மலி யாக்கையை-துன்பம் நிறைந்த தோலினுல் மூடி யுள்ள சரீரத்தை, யான் என எண்ணி-யான் என்று அபிமாநித்து, அதை இச்சியான்-அவ் வுடலே வாஞ்சை செய்யான். எ-று. 100

தத் 106 கடமெனு முபாதி.

### பிரபு லிங்க லீலே 12 கதி, முத்தாயி யம்மைக்கு பிரபு தேவர் அருளிச் செய்தல் 11 கவி.

ஒண்ட ரைக்கண்ணொ டிவில ருளுருக்,
கொண்ட டுத்தகு ருவரு ளாற்றன்னைக்,
கண்ட மெய்த்தவன் காயந்த னையந,
முண்ட நெட்டிலை யொப்பவி டுப்பனல். 101

(இ-ள்) ஒண் தரைக்கண்—அழகிய இப் பூமியின் கண், ஒடிவு இல்—நாச மில்லாத, அருள் உருக் கொண்டு-அருளே திரு வுரு வாகக் கொண்டு, அடுத்த—(தன்னைச் சரணு கதி யாக) அடைந்த, குரு அருளால்—தேசிகரது கிருபையினல், தனை கண்ட-ஆன்மாவை சாட்சாத்கரித்த, மெய்த்தவன்—மெஞ் ஞானி யானவன், காயந்தனை-(இந்த) சரீரத்தை, அநம் உண்ட—அந்நம் புசித்து (எறிந்த), நெட்டு இலை ஒப்ப-நீண்ட (வெச்சி) லிலைக்குச் சமான மாக, விடுப்பன்—விட்டுவிடுவான். எ—று. "காயம் தனை" என்பதில், தன் அசை. 101

### ஞான வாசிட்டம் நிர்வாணப் பிரகரணம் இதோபதேசம் 8 கவி.

உவக்கும் வீடே யெவ்வளவிற் றுலக நடையே யுயர்ந்தது. 102

(இ-ள்) உவக்கும் வீடே எவ் வளவிற்று—சந்தோஷிக்கும் மோக்ஷமே எத்தகையது, உலக நடையே உயர்ந்தது—சம்சார வொழுக்கமே மேலானது. எ—று. 102



ஷ

### ஞான வாசிட்டம் 6 வது பிரகரணம் இக்ஷுவாகு கதை 63 கவி.

பற்று முனிவு பயஞ்சுகங்கள்
பயிலா னெனினும் பயின்றிடினுஞ்,
சொற்ற வெவர்க்கும் பிரமேயந்
தொடரா னெனினு நண்பாலர்,
பெற்ற பிரமே யத்துறினும்
பெரிய மநத்தோன் காசியிற் சா,
வுற்ற பொழுது நாய்க்கறிப்போ
ருழைசா வுறினு முறும்பதங்கேள். 102

(இ-ள்) பற்று முனிவு பயம் சுகங்கள்—விருப்பு வெறுப்பு அச்சம் ஆநந்தங்களை, பயிலான் எனினும் பயின்றிடினும்—விட்ட போதினும் தொட்ட போதினும், சொற்ற எவர்க்கும்—கூறப்பெற்ற எவருக்கும், பிரமேயம் தொடரான் எனினும்—விடயப்படான் எனினும், நண் பாலர் பெற்ற பிரமேயத்து உறினும்—நல்ல பாலகர் அடைவுற்ற விடயத்து உற்ற போதினும், பெரிய மநத்தோன்—மகா மநத்த னுனவன், காசியில்-(அவிமுக்த க்ஷேத்திர மென்னு) மோக்ஷ நகரத்தில், சாவுற்ற பொழுதும்—மரண மடைந்த போதும், நாய் கறிப்போ ருழை—நாய் (க் கறி) சமைக்கின்ற சண்டாளரது மனையில், சா உறினும்—இறந்த போதினும், உறும் பதம் கேள்—அடையப் பெற்ற பதத்தைக் கேட்பாயாக. எ—று. 102

தத் 106 கடமெனு முபாதி..

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் இக்ஷுவாகு கதை 64 கவி.**

ஞாந மடைந்த பொழுதிலிவ னல்வீ
டுற்றேன் மநமிறந்தோ,
னீன மான வகம்பாவப் பிராந்தி யன்றே விடர்பந்த,
மான வீடா வதுமடமை யந்த காரங் கெடலன்றே,
மாந மிகுந்த விவனெய்தின் மனிதர்
பூசை செயவேண்டும். 103

(இ-ள்) ஞாநம் அடைந்த பொழுதில்-பிரம வித்தையை யடைவுற்ற பொழுதே, இவன்-இவ் வறிஞன், நல் வீடு உற்றேன்-நல்ல மோக்ஷத்தை யடைந்தவன், மநம் இறந்தோன்-உள்ளம் ஒழிந்தவன், ஈனம் ஆன-நீசம் ஆன, அகம் பாவப் பிராந்தி அன்றே-அகந்தை யாகிய மயல் அல்லவோ, இடர் பந்தம்-துயரைக் கொடுக்கும் கட்டாம், ஆன வீடு ஆவது-(ஞாநத்தால்) ஆன மோக்ஷ மாவது, மடமை அந்தகாரம்-அறியாமை யாகிய பேரிருள், கெடல் அன்றே-கெடுத லல்லவோ, மாநம் மிகுந்த இவன்-(வெகு) மாந மிக்க இவ் வறிஞன், எய்தின்-அடையப் பெறின், மநிதர் பூசை செயவேண்டும்-அதிகாரிகள் பூசை யியற்ற வேண்டும் எ-று. 103

தத் 106 கடமெனு முபாதி.

**திருமந்திரம் 7 தந்திரம் 19 சமாதிக் கிரியை 1910 கவி 1.**



அந்தமின் ஞாநிதன் னாகந் தீயினில்,
வெந்திடி னாடெலாம் வெப்புத் தீயினில்,
நொந்தது நாய்நரி நுகரி னுண்செரு,
வந்துநாய் நரிக்குண வாகும் வையமே. 104

(இ-ள்) அந்தம் இல்-நாச மற்ற, ஞாநி-ஞாநியினுடைய, ஆகம் தீயினில்-சரீர மானது அக்கிநியில், வெந்திடில்-(வைத்துக்) கொளுத்தப்படில், நாடு எலாம்-பிரபஞ்ச முழுமையும், தீயினில் வெப்பு-அக்கிநியினால் வெதும்பி, நொந்தது-துன்ப மடையும், நாய் நரி நுகரில்-(அந்த ஞாநியினது சரீரத்தை) நாய் நரிகள் தின்றால், நுண் செரு வந்து-(அவ் விடத்தில்) அதிக யுத்தம் மூண்டு, வையம்-பிரபஞ்சத்தி லுள்ள ஜீவர்கள், நாய் நரிக்கு உணவு ஆகும்-சரீரம் நாய் நரிகளுக்கு (தின்ன) இறை யாகும். எ-று. ஏ-தன்-அசை. 104

ஷை

**ஷை ஷை 1911 கவி 2.**

எண்ணிலா ஞாநி யுடலெரி தாவிடி,
லண்ணறங் கோயி லழலிட்ட தாங்கொக்கு,
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமா,
மெண்ணரு மன்ன ரிழப்பா ரரசே. 105

(இ-ள்) எண் இலா ஞாநி-அளவிடக் கூடாத (மகிமை வாய்ந்த) ஞாநியினது, உடல்-சரீரத்தில், எரி தாவிடில்-அக்கிநி பற்றுமானால், அண்ணல் கோயில்-

பரம சிவனது ஆலயத்தில், அழல் இட்டது ஒக்கும்-அக்கினிவைத்ததற்குச் சமானமாகும், மண்ணில் மழை விழா-பூமியில் வருஷம் வருஷிக்கமாட்டாது, வையகம் பஞ்சம் ஆம்-பிரபஞ்சம் (முழுமையும்) பஞ்சம் பீடிக்கும், எண் அரும் மன்னர்-அள வற்ற அரசர்கள், அரசு இழப்பார்-இராஜ்ஜியத்தைத் துறப்பார்கள். எ-று. தம்-ஆங்கு ஏ அசை. 105

தத் 106 கடமெனு முபாதி.

**திருமந்திரம் 19 சமாதிக் கிரியை 1912 கவி 3.**

புண்ணிய மாமவர் தம்மைப்பு தைப்பது,
நண்ணி யனல்போக்கி னுட்டி லழிவாகு,
மண்ணி லழியில லங்கார பங்கமா,
மண்ணுல கெல்லாம யங்குமனன் மண்டியே. 106

(இ-ள்) அவர்தம்மை-அந்த ஞானியினது சரீரத்தை, புதைப்பது-சமாதி வைத்து (பூசிப்பது), புண்ணியம் ஆம்-புண்ணிய மாகும் (அங்ஙனம் செய்யாமல்), நண்ணி-விரும்பி, அனல் போக்கின்-அக்கினியில் வைத்துக் கொளுத்தப்) பெறில், நாட்டில் அழிவு ஆகும்-உலகில் யாவும் நாச மடையப் பெறும், மண்ணில் அழியில்-பூமியில் (கரையான் முதலியவை தின்று) நாச மடையின், அலங்கார பங்கம் ஆம்-(அந்த ஊர்) சோபை யில்லாமல் போகும், மண் உலகு எல்லாம்-பிரபஞ்ச முழுமையும், அனல் மண்டி-அக்கினி (பிரவேசித்து) மூடி, மயங்கும்-மயக்கத்தை யடையும். எ-று. அவர் "தம்மை" என்பதில் தம் ஏ அசை. 106



ஷை

**ஷை ஷை 1913 கவி 4.**

அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கால்,
லந்த வுடருன் குகைசெய்தி ருத்திடிற்,
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு,
மந்தமி லின்பவ ருள்பெறு வாரே. 107

(இ-ள்) அந்தம் இல் ஞானி-நாச மில்லாத ஞானியானவன், அருளை அடைந்தக்கால்-விதேக மோக்ஷ மடையில், அந்த உடல்-அந்த சரீரத்தை, குகை செய்து இருத்திடில்-குகை கட்டி (அதில்) சமாதி வைக்கில், சுந்தர மன்னரும்-அழகினை யுடைய அரசர்களும், தொல் புவி யுள்ளோரும்-பழமை யான பூமியில் உள்ளவர்களும், அந்தம் இல்-அளவிடக் கூடாத, இன்ப அருள் பெறுவார்-ஆநந்த மாகிய கிருபையைப் பெறுவார்கள். எ-று. தான்-ஏ-அசை. 107

தத் 107 சொல்லிய மகனே.

**ஞான வாசிட்டம் 6 நிர்வாணப் பிரகரணம் தேவ பூசை கதை 56 கவி.**

பெரிய மாயை காரணமாம் பொருளன் ருயுங்
குருவாக்காற் புகலும் பொருளாய்க் காரணமாய்,
மருவு முணர்வாந் தன்னுருவை வழுவா
தளிக்கும் முணர்வோர்க்கே. 108

பரம சிவனது ஆலயத்தில், அழல் இட்டது ஒக்கும்—அக்கினிவைத்ததற்குச் சமானமாகும், மண்ணில் மழை விழா—பூமியில் வருஷம் வருஷிக்கமாட்டாது, வையகம் பஞ்சம் ஆம்—பிரபஞ்சம் (முழுமையும்) பஞ்சம் பீடிக்கும், எண் அரும் மன்னர்—அள வற்ற அரசர்கள், அரசு இழப்பார்—இராஜ்ஜியத்தைத் துறப்பார்கள். எ-று. தம்—ஆங்கு ஏ அசை. 105

தத் 106 கடமெனு முபாதி.

**திரு மந்திரம் 19 சமாதிக் கிரியை 1912 கவி 3.**

புண்ணிய மாமவர் தம்மைப்பு தைப்பது,
நண்ணி யனல்போக்கி னாட்டி லழிவாகு,
மண்ணி லழியில லங்கார பங்கமா,
மண்ணுல கெல்லாம யங்குமனன் மண்டியே. 106

(இ-ள்) அவர்தம்மை—அந்த ஞானியினது சரீரத்தை, புதைப்பது—சமாதி வைத்து (பூசிப்பது), புண்ணியம் ஆம்—புண்ணிய மாகும் (அங்ஙனம் செய்யாமல்), நண்ணி—விரும்பி, அனல் போக்கின்—அக்கினியில் வைத்துக் கொளுத்தப்) பெறில், நாட்டில் அழிவு ஆகும்—உலகில் யாவும் நாச மடையப் பெறும், மண்ணில் அழியில்—பூமியில் (கரையான் முதலியவை தின்று) நாச மடையின், அலங்கார பங்கம் ஆம்-(அந்த ஊர்) சோபை யில்லாமல் போகும், மண் உலகு எல்லாம்—பிரபஞ்ச முழுமையும், அனல் மண்டி—அக்கினி (பிரவேசித்து) மூடி, மயங்கும்—மயக்கத்தை யடையும். எ-று. அவர் "தம்மை" என்பதில் தம் ஏ அசை. 106



ஷ

**ஷ ஷ 1913 கவி 4.**

அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கால்,
லந்த வுடலுன் குகைசெய்தி ருத்திடிற்,
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு,
மந்தமி லின்பவ ருள்பெறு வாரே. 107

(இ-ள்) அந்தம் இல் ஞானி—நாச மில்லாத ஞானியானவன், அருளை அடைந்தக்கால்—விதேக மோக்ஷ மடையில், அந்த உடல்—அந்த சரீரத்தை, குகை செய்து இருத்திடில்—குகை கட்டி (அதில்) சமாதி வைக்கில், சுந்தர மன்னரும்—அழகினை யுடைய அரசர்களும், தொல் புவி யுள்ளோரும்—பழமை யான பூமியில் உள்ளவர்களும், அந்தம் இல்—அளவிடக் கூடாத, இன்ப அருள் பெறுவார்—ஆநந்த மாகிய கிருபையைப் பெறுவார்கள். எ-று. தான்—ஏ—அசை. 107

தத் 107 சொல்லிய மகனே.

**ஞாந வாசிட்டம் 6 நிர்வாணப் பிரகரணம் தேவ பூசை கதை 56 கவி.**

பெரிய மாயை காரணமாம் பொருளன் றுயுங்
குருவாக்காற் புகலும் பெர்ருளாய்க் காரணமாய்,
மருவு முணர்வாந் தன்னுருவை வழுவா
தளிக்கு முணர்வோர்க்கே. 108

(இ-ள்) பெரிய மாயை காரணம் ஆம்-பெரிதாம் மாயை காரணத் தன்மையை யடையும், பொருள் அன்றுயும்-வஸ்து அல்ல வாயும், குரு வாக்கால் புகலும் பொருள் ஆய்-ஆசிரியரது உபதேசத்தா லுபதேசிக்கத் தக்க வஸ்து வாய், காரணம் ஆய்-(அகாரணமாயினும்) காரணம் ஆய், மருவும் உணர்வு ஆம் தன் உருவை-பொருந்தாநின்ற அறிவாம் தனது வடிவத்தை, உணர்வோர்க்கே-அறிவுடையவர்க்கே, வழுவாது அளிக்கும்-நழுவாது அடைவிக்கும். எ-று. 108

ஷ

**வாசிட்டம் 4 திதிப் பிரகரணம் தாசூரன் கதை 107 கவி.**

குருவின்வல் லபவிளக் கந்தாங்,
கண்டன மெனல்வீ ணுகும்நீ தானுங்
கண்டன பரம்பொருட் பொலிவே. 109

(இ-ள்) குருவின் வல்லப விளக்கம் தாம்-மகத்தான தென்னும் சம்பத்துக்களானே தூண்டப்பட்ட போக விலாசங்கள், கண்டனம் எனல் வீண் ஆகும்-(சாசுவதங்கள் என்று) உண்டாம் இப்பிரமம் (நினக்கு) ஆகா தொழிக, நீ தானும் கண்டன-நீயும் திருசியம் யாவும், பரம் பொருள் பொலிவே-அவ் வாத்ம தத்துவத்தின் விலாச மென்பதே சத்தியம். எ-று. "நீ தானும்" என்பதில், தான் ஏ அசை. 109

தத் 108 கானல்நீர் கிளிஞ்சில்.



**பட்டிநத்துப் பிள்ளையார் திருக் கழு மல மும் மணிக் கோவை 10.**

எந்தை நின்,
திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும்,
யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி,
மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை,
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய,
சிற்ப விகற்ப மெல்லா மொன்றிற்,
றவிராது தடவினர் தமக்குச்,
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே. 101

(இ-ள்) ஓவியப் புலவன்-சித்திரம் வரைபவனுல், சாயல் பெற எழுதிய-சாயை பொருந்த வரையப்பட்ட, சிற்ப விகற்பம் எல்லாம்-சிற்பவிகற் பங்கள் யாவற்றையும், ஒன்றில் தவிராது தடவினர் தமக்கு-ஒன்றும் விடாது தடவிப் பார்த்தவர்கட்கு, சுவராய்த் தோன்றும்-சுவராகவே தோற்றுகின்ற, துணிவு போன்றனவே-நிச்சயம் போலவே. எந்தை நின்-எமது தந்தை யாகிய பரமசிவனே தேவரீரது, திரு வளர் நாட்டம்-அழகு வளராநின்ற பார்வையை, கருணையில் பெறலும்-கிருபையினுலே அடைதலும், யாவையும்-சகலமும், எனக்கு பொய் எனத் தோன்றி-எனக்கு மித்தையாகத் தோன்றி, மேவ அரும் நீயே-அடைதற்கு அருமையான தேவரீரே, மெய் எனத் தோன்றினை-சத்திய மாக விளங்குகின்றனை. எ-று. "தடவினர் தமக்கு" என்பதில், தம் அசை. "மேவ அரும்" என்பது, அகாரம் செய்யுள் விகாரத்தாற் றெக்கது. 101

1வது தத்துவ விளக்கப்படல உதாரணக் கவி 114
ஆதித்தன் உரை முற்றுப் பெற்றது.

* * *

உ சிவமயம்.

# 2 வது சந்தேகந் தெளிதற் படலம்.

சந்–2. நற்கருத் துடையோ.

## கைவல்லிய நவநீதம், சந்தேகந் தெளிதற் படல, உதாரணக் கவிகளின் உரை.



### ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் தேவ பூசை கதை 58 கவி.

தேசார் குருநூன் மாணுக்கன் சிறக்க விம்மூ வருங் கூடிற்,
பாசா தீதப் பரமெய்தும் பன்னு ணீங்கா விக்கூட்ட,
மேசா உணர்வைத் தரும். 1

(இ–ள்) தேசு ஆர் குரு நூல்–சுவாநுபூதி மயமாய ஆசாரியன் சாஸ்திரம், மாணுக்கன்–சிஷ்யன் (என்னும்), இம் மூவரும் சிறக்க கூடில்–இம் மூன்றும் விசேடமாகச் சேர்ந்தால், பாச அதீதப் பரம் எய்தும் சகல பாசங்களும் கடந்த பரசிவன் அடையப் பெறும், பல் நாள் நீங்கா இக் கூட்டம்–நெடும் போது நீங்காத இந்தச் சமாகமம், ஏசா உணர்வைத் தரும்–யாவரும் புகழும் ஞாநத்தைக் கொடுக்கும். எ–று. 1

ஷி

### பட்டிநத்துப் பிள்ளையார் கைலாயம் 7 கவி.

மந்திக்கு ருளையொத் தேனில்லை நாயேன்வ ழக்கறிந்துஞ்,
சிந்திக்குஞ் சிந்தையை யானென்செய் வேனெனைத்
[தீதகற்றிப்,
புந்திப் பிரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போ,
லெந்தைக்கு ரியவன் காணத்த னேகயி லாயத்தனே. 2



(இ–ள்) அத்தனே கயிலாயத்தனே–பரமசிவனே திருக் கைலாயத்தில் எழுந்தருளியவனே, மந்திக் குருளை–குரங்கின் குட்டியை, நாயேன்–அடியேன், ஒத்தேன் இல்லை–ஒத்தவனாக இல்லை, வழக்கு அறிந்தும்–வழக்கை உணர்ந்தும், சிந்திக்கும்–(பல விஷயங்களைச்) சிந்திக்கின்ற, சிந்தையை–மனதை, யான் என் செய்வேன்–யான் யாது செய்வேன், எனைத் தீது அகற்றி–என் மீது உள்ள குற்றத்தைப் போக்கி, புந்தி-புத்தியில், பரிவில் குருளையை ஏந்திய–பிரியத்தோடு குட்டியை கவ்விச் செல்லும், பூசையைப் போல்–(தாய்ப்) பூனை போல, எந்தைக்கு உரியவன்–எமது தந்தையாகிய தேவரீருக்கே அடிமையானவனும். எ–று. 2
காண்–அசை.

சந் 3 சந்ததம் புருடன்.

### ஞாந வாசிட்டம் 3 உற்பத்திப் பிரகரணம் ஞாநவிண் மகன் கதை 34 கவி.

பராபரமா மப்பொருளை வயங்கக் கண்டாற், 3
பெருமநக் கட்டறுமைய மறுங்கரும மறும்.

(இ–ள்) பராபரம் ஆம்–பரங்களும் அபர மாகும்படி விளங்கும், அப் பொருளை–அத்தகைய பரமாத்மாவை, வயங்கக் கண்டால்-விளங்கும்படி (ஐயந் திரிபறத்) தெரிசித்தால், பெரு மநக் கட்டு அறும்–இருதயம் பெருங் கிரந்தி நீங்கும், ஐயம் அறும்–சர்வ சமசயங்களும் போம், கருமம் அறும்-கருமங்கள் (யாவுமே) கழிந்தோடும். எ–று. 3

சந் 4 எனவுரைத் தருளு.

**தத்துவ ராயர் அமிர்த சாரம் 24 கவி.**

ஊர்வ பதினென்று மொன்பானு மாநுடவர்,
நீர்பறவை நாற்காலி நேர்பந்தாஞ்—சீர்திகமு,
மூவாருந் தாபரங்கண் முப்பத்து மும்மையோ,
ராவா ரொருபதா ரும். 4

(இ—ள்) ஊர்வ பதின் ஒன்று ஆம்—பூமியில் ஊர்ந்து செல்லும் ஜெந்துக்கள் பதி னொரு லக்ஷம் பேத மாம், மா நுடவர் ஒன்பான் ஆம்—மா நுடர்களில் ஒன்பது லக்ஷம் பேதமாம், நீர் பறவை நால்காலி—ஜலத்து வசிக்கின்றனவும், பறப்பனவும், நாற் கால் மிருகங்களும், நேர் பத்து ஆம்—நேரே பத்து பத்து லக்ஷம் வித்தியாச மாம், சீர் திகழும்—சிறப்போடு விளங்குகின்ற, தாபரங்கள்—விருஷ ஜாதிகள், மூ ஆறு ஆம்—பதி னெட்டு இலக்கம் பேத மாம், முப் பத்து மும்மையோர்—முப் பத்து மூன்று பிரிவினை யுடைய தேவர்கள், ஒரு பது ஆறு ஆம் ஆவார்—பதி னாறு லக்ஷம் வித்தியாச முடையவ ராவர். எ—று. 4

சந் 9 தன்பதி யல்லாப்.

**பாகவதம் 10 ஸ்கந்தம் 50 அத்தியாயம் 11 கவி.**

புநிதமற் றுன்னை யல்லாப் பொருள்பரப் பிரமமல்ல,
வெனவெடுத் துரைப்ப தல்லா லீரெடு தோற்ற மின்றித்,



தனிமுத லாகி நின்ற சச்சிதா நந்த மூர்த்தி,
நினைவருஞ் சுடரே நின்னை நிகழ்த்துமா றறிகி லேமால். 5

(இ—ள்) புநிதம் அற்று—புநிதம் இன்றி, உன்னை அல்லாப் பொருள்—உன்னை யல்லாத வஸ்து, பரப் பிரமம் அல்ல—பரப் பிரமம் அல்ல, என எடுத்து உரைப்பது அல்லால்—என்று எடுத்து ஸ்தோத்தரிப்ப தல்லாமல், ஈரெடு தோற்றம் இன்றி—உற்பத்தி நாச மில்லாத, தனி முதல் ஆகி நின்ற—கேவல பிரம சொருப மா யுள்ள, சச் சிதாநந்த மூர்த்தி—சச்சிதாநந்த மூர்த்தியே, நினைவு அரும் சுடரே—(மனதினால்) நினைக்க முடியாத பிரகாசமே, நின்னை—உன்னை, நிகழ்த்தும் ஆறு—துதிக்கும் வழியை, அறிகிலேம்—உணர்ந்திலேம். எ—று. ஆல்—அசை. 5

சந் 10 முந்திய சங்கை.

**வாசிட்டம் 3 உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 26 கவி.**

மானத நினைத்த தைம்பொறி யியற்று மன்னவர்க்
கமைச்சர்போல். 6

(இ—ள்) மன்னவர்க்கு—அரசர்களுக்கு, அமைச்சர் போல்—மந்திரிகள் (காரியங்களை நடத்துவது) போல, மாநதம் நினைத்தது—மனது சங்கல்பித்ததை, ஐ பொறி இயற்றும்—பஞ்சேந்திரியங்களும் செய்யும். எ—று. 6

சந் 16 கருதுமனே குண.

**ஞாந வாசிட்டம் 4 பிரகரணம் தாசூரன் கதை 97 கவி.**

தூய்சத் துவங்கொள்சங் கற்ப,
மிக்கநற் றரும ஞாநவீ டுளதாய் வேந்தர்வேந்
தெனமிக விளங்கும். 7

(இ-ள்) தூய சத்துவம் கொள் சங்கற்பம்-பரி சுத்த மாய சத்துவ ரூப சங்கல்ப மானது, மிக்க நல் தருமம்-(இச்சை யின்றிய) மேன்மை வாய்ந்து மநத் தூய்மை பயக்கும் நிட்காமிய புண்ணியம், ஞாநம்-(அதனுற் பரம்பரையா யுண்டாம் தத்துவ) ஞாநம், வீடு உளது ஆம்-(அதனுல்) மோக்ஷம் என்பவற்றைப் பயப்ப தாய், வேந்தர் வேந்து என மிக விளங்கும்-சாம் ரர்ஜ்யம் போல மிகவும் இருந் திலங்கும். எ-று. 7

ஷ

**ஈசுர கீதை 7 அத்தியாயம் 16 கவி.**

சத்துவ ஞாநமாந் தமமஞ் ஞாநமா மத்திமங் கலப்பதாம். 8

(இ-ள்) சத்துவம்-சத்துவ (குண) மானது, ஞாநம் ஆம்-(தத்துவ) ஞாநத்தைப் பயக்கும், தமம்-தமோ (குண) மானது, அஞ்ஞாநம் ஆம்-இருட் டினைக் கொடுப்பதாம், மத்திமம்-மத்திம (மாகிய இரஜோ குண) மானது, கலப்பது ஆம்-(இவ் விரண்டும்) சேர்ந் துள்ள தாம். எ-று 8



சந் 17 (அவதாரிகை) மனது சத்துவ.

**ஞாந வாசிட்டம் 4 பிரகரணம் தாம வியாள கடர் கதை 18 கவி.**

மநமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்ரு,
கனமுறு விவேக நீராற் கழுவினுற் சித்தி காட்டும். 9

(இ-ள்) மந மணி-மந மாகிய மணியானது, பேதச் சேற்றில் மறைந்து-பேத பங்க களங்கித மாகி, ஒரு வருக்கும் தோன்ரு-எவருக்குமே புலப்படாது; கனம் உறு விவேக நீரால்-மிகுதி யாக அப்பியாசிக்கப்பட்ட பேரறி வாகிய ஜலத்தால், கழுவினுல்-சுத்தஞ் செய்தால், சித்தி காட்டும்-மோக்ஷத்தைத் தரிசிப்பிக்கும். எ-று. 9

சந் 18 களங்கமற்ற.

**பிரம கீதை 4 அத்தியாயம் 23 கவி.**

தத்துவ ஞாநி காணிலுஞ் சகத்தைக் கண்டிலன்
றத்வமே கண்டான். 10

(இ-ள்) தத்துவ ஞாநி-பிரமவித் தானவன், சகத் தைக் காணினும்-உலகத்தைக் கண்டாலும், கண் டிலன்-காணுதவ னுவன், தத்துவமே கண்டான்-தத்துவ ரூப மான பிரம மாகவே கண்டவ னுவான். "காணிலும்" என்ற உம்மை. எச்சப் பொருட்டு. 10

சந்தே 18 களங்கமற்ற.

### பகவத் கீதை 2 அத்தியாயம் 57 கவி.

காதலின் ஞாநி யத்தைக் கண்ணிஞற் றெரியக் காணுன். 11

(இ-ள்) காதல் இல் ஞாநி—விஷய ஆசை யொழிந்த ஞாநி யானவன், அத்தை—அந்தச் (சப்தாதிவிஷய) புத்தியை, கண்ணினுல் தெரியக் காணுன்—கண்ணினுல் தோன்றப் பாரான். எ—று. 11

சந்தே 19 ஏகமாய்.

### ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித் துவசன் கதை 157 கவி.

தமையுணர்ந்தோர்,
கொள்ளுற்ற தொழிலெல்லா மநத்த தன்ருே,
கொள்மநமன் றியினடக்குங் கொள்கை யென்னே. 12

(இ-ள்) தமை உணர்ந்தோர்—தமது செருபத்தை உணர்ந்தவர், கொள் உற்ற தொழில் எல்லாம்—கவர்வுற்ற வினைக ளெல்லாம், மநத்தது அன்ருே—உள்ளத்ததே யல்லவோ, கொள் மநம் அன்றியில்-கவரும் உள்ளமில்லாமல், நடக்குங் கொள்கை என்னே—விவகரிக்கும் கொள்கை யெப்படியோ. எ—று. 12

சந்தே 20 மன நாசஞ்.

### ஞாந வாசிட்டம் 5 உபசாந்திப் பிரகரணம் இதோபதேசம் 8 கவி.



ஒன்று மருவு முருவமென வுளத்தினுச மோரிரண்டே 13

(இ-ள்) ஒன்றும் அருவும் உருவும் என—இலயமாகும் அருபம் சருபம் என்ப தாக, உளத்தின் நாசம் ஓர் இரண்டே—மநோ நாசம் இரு வகையே யாகும். எ—று 13

சந்தே 20 மநநாசஞ்.

### ஞாந வாசிட்டம் 5 உபசாந்திப் பிரகரணம் இதோபதேசம் 9 கவி.

சீவன் முத்தி தனிலுருவ நாசஞ் சித்தந் தனக்குளதாந்,
தாவி லுடறீர் முத்திதனிற் சாற்று மருவ நாசமுறும். 14

(இ-ள்) சீவன் முத்திதனில்—ஜீவன் முக்தி யவஸ்தையில், உருவ நாசம் சித்தம் தனக்கு உளது ஆம்-சருப நாசம் மநந் தனக் குண்டாம், தாவில் உடல் தீர் முத்தி தனில்—இனித் தேகம் வராமல் உடல் (இடர்) தீர்ந்த விதேக முத்தியில், சாற்றும் அருவ நாசம் உறும்—(முன்) மொழிந்த அருப நாச மான துண்டாம். எ—று. "முத்தி தனில்", "முத்தி தனில்" என்பவற்றில், தன் தன் அசை. 14

சந்தே 21 சுத்தமாஞ்.

### ஈசுவர கீதை 6 அத்தியாயம் கவி 25.

இல்லை இல்லை யென்று ஈசன் இயம்பினுன். 51

(இ-ள்) ஈசன்-ஈசுவரன், இல்லை இல்லை- ,, என்று- என, இயம்பினுன்-கூறினுன். 15

ஷை

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் கசன் கதை 7 கவி.

சித்த மாவது நானெனச் செப்புவர். 15A

(இ-ள்) சித்தம் ஆவது-மநம் என்று சொல்லப் படுவது. நான் எனச் செப்புவர்-அகம் அகம் என்று சொல்லுவார்கள். எ-று. 15A

ஷை

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் மாநு வேடன் கதை 22 கவி.

அகங்கா ரத்துருவா மந்த மநநிச் சயமாகத்,
திதமாய் நமுவி நெடுநாளாம். 16

(இ-ள்) அகங்காரத்து உருவு ஆம்-அகங்கார வடிவாம், அந்த மநம்-அவ் வுள்ளம், நிச்சயம் ஆக-துணிபாக, திதம் ஆய் நமுவி-நிலை யாய் லீந மாகி, நெடு நாள் ஆம்-வெகு கால மாயது. எ-று. 16

சந்தே 21 சுத்தமாஞ்.

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித் துவசன் கதை 158 கவி.

உரையெனமன் னவன்கேட்பக் கும்பன் சொல்வா
னுளமென்று சொன்னதுவே றென்று மன்று,
கரையறுபல் பவந்தருவா தனையே யுள்ளங்
கண்டதனை யறிந்தாலக் கவலை யில்லை,
வரையறக்கண் டவர்கருமங் களிற்ச ரிக்கும்
வாதனைதான் மறுபிறப்பை வழங்கா தந்தப்,
புரைமநஞ்சத் துவமென்பர் சித்த மென்று
போதமில்லாச் சித்தத்தைப் புகல்வவ ரன்றே. 17

(இ-ள்) உரை என மன்னவன் கேட்ப-கூறுவாயாக வென்று அரசன் வினவ, கும்பன் சொல்வான்-கும்ப முநி கூறுவான், உளம் என்று சொன்னது-மநமென்று கூறியது, வேறு ஒன்றும் அன்று-அயல் ஒன்றும் அல்லவாம், கரை அறு பல் பவம் தரு வாதனையே-அள வில்லாத அநேக ஜநநம் தந்திடும் வாசனையே, உள்ளம்-மநம் ஆம், அதனை கண்டு அறிந்தால் அக் கவலை இல்லை-அதனைப் பார்த் துணர்ந்தால் அந்தக் கிலேச மில்லை, வரை அறக் கண்டவர்-நன் ருகக் கண்டவர், கருமங்களில் சரிக்கும் வாதனை-தொழில்களில் வியவ கரிக்கும் வாதனையானது, மறு பிறப்பை வழங்காது-புநர் ஜெநநத்தைக் கொடுக்காது, அந்தப் புரை மநம்-அந்த விவகார சாதக மான மநது, சத்துவம் என்பர்-சத்துவ மா மென்று கூ ரு நிற் பர், சித்தம் என்று-உள்ளம் என, போதம் இல்லாச் சித்தத்தை-உணர் வில்லாத மநத்தை, புகல்வர்-கூறுவர். எ-று. தான்-அன்று ஏ-அசைகள். 17

சந்தே 22 விவகார வேளை.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் வீதகவ்வியன் கதை 23 கவி.

காயத்தின் வேருகத் தன்னைக் கண்டோன்
காயமீ ரினுமறியான் கன்னற் கட்டி,
தீயிற்கா யினுமரிந்த போது மின்பந்
தீராத வாறுபோற் றெளிந்த ஞாநி,
மாயத்தின் மோகத்தாற் பேத மாகான்
மணந்தபர புருடன்மேன் மநஞ்சேர் மங்கை,
நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யு மாபோ
னிகழ்தொழிற்செய் யினும்பரத்தி னிலைமை நீங்கான்.
18

(இ-ள்) காயத்தின் வேறு ஆகத் தன்னைக் கண்டோன்-தேகத் திரயத்தினும் வியதிரேக மாக (சா க்ஷி யாகிய) தன்னை சாக்ஷாத்கரித்தவன், காயம் ஈரினும் அறியான்-தேகத்தைச் சேதித்த போதினும் உணரான், கன்னல் கட்டி தீயில் காயினும்-வெல்லத்தைக் காய்ச்சிய போதினும், அரிந்த போதும்-துண்டம் துண்டம் ஆக வெட்டிய போதினும், இன்பம் தீராத ஆறு போல்-மாதுர்ய சுபாவத்தை விடாத் தன்மை போலும், தெளிந்த ஞாநி-அப்பிரதிபந்த அபரோக்ஷப் பிரம்ம ஞாநி யானவன், மாயத்தின் மோகத்தால் பேதம் ஆகான்-மாயா வத்துக்களின் மயக்கத்தால் மாறுபாடாக மாட்டான், மணந்த பர புருடன் மேல்-அநுபவித்த சோர நாயகன் மீது, மநம் சேர் மங்கை-புத்தியை வைத்துள்ள நாரியானவள், நேயத்தால்-அன்போடும், மனைத் தொழில்கள்-கிருக கிருத்தியங்களை, செய்யும் ஆ(று) போல்-செய்வ தொப்ப, நிகழ் தொழில் செய்யினும்-(பிராரத்த வசத்தால்) எய்திய வினைகளைச் செய்த போதினும், பரத்தின் நிலைமை நீங்கான்-சொச் சொரூ பாநுசந்தாநத்தை விட் டகலான். எ-று. "ஈறினும்" "செய்யினும்" என்ற உம்மைகள். முற் றும்மை. 18



சந்தே 22 விவகார வேளை.

**ஞாந வாசிட்டம் 5 உபசமப் பிரகரணம் சுரகு கதை 40 கவி.**

வெறிதி ருக்கினுந் தொழிலினை மேவினும் விடாம,
லறிஞ னென்றுதான் சமாதிவிட் டகன்றவ னுகுஞ்,
செறியு ஞாநஞ்சேர் மநத்தினர் சகத்தொழில் செயினும்,
பிறிவில் தத்துவ நிட்டராய்ச் சமாதியிற் பெயரார். 19

(இ-ள்) வெறிது இருக்கினும்-சும்மா விருந்த போதினும், விடாமல் தொழிலினை மேவினும்-(இடை) விடாமல் விவகாரத்தைச் செய்யினும், அறிஞன்-(சொரூபத்தை) யுணர்ந்தவன், என்று தான்-சமாதி விட்டு அகன்றவன் ஆகும்-எப்போது தான் சமாதியை விட் டொழித்தவ னுவன், செறியும் ஞாநம் சேர் மநத்தினர்-பூரண ஞாநத்தினை யுடைய மநத்தோர், சகத் தொழில் செயினும்-உலக விவகாரத்தைச் செய்த போதிலும், பிறிவில் தத்துவ நிட்டர் ஆய்-பேதமுறுத தத்துவத்தினது நிஷ்டை யுடையவ ராகி, சமாதியில் பெயரார்-சமாதியி னின்றும் அகலார். எ-று. "செயினும்" என்ற உம்மை. எச்சவும்மை. 19

சந்தே 24 செய்கையுஞ்செய்.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் மானு வேடன் கதை 21 கவி.**

கூட்டு பொறியின் றொழிலெல்லாங்
கொள்ளு மநஞ்செய் குவதன்றோ. 20

(இ-ள்) கூட்டு பொறியின் தொழில் எல்லாம்-(விடயங்களைச்) சேர்க்கும் இந்திரியங்களின் வினைகள் யாவும், கொள்ளு மநம் செய்குவது அன்றோ-(அவற்றைக்) கவரும் உள்ளம் பண்ணுவ தல்லவோ, எ-று. 20

சந்தே 24 செய்கையுஞ்செய்.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித்துவசன் கதை 157 கவி.**

தமையுணர்ந்தோர் கொள்ளுற்ற தொழிலெல்லா
மநத்த தன்றோ. 21

(இ-ள்) தமை உணர்ந்தோர்-தங்க ளுடைய சொருபத்தை யுணர்ந்தவர்கள், கொள் உற்ற தொழில் எல்லாம்-கவர் வுற்ற வினைக ளெல்லாம், மநத்தது அன்றோ-உள்ளத்ததே யல்லவோ. எ-று. 21

சந்தே 25 அறுசுவையின்.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் விரதத் திரய கதை 13 கவி.**

அகலரசு மிடிகளுநன் றெனப்புசிப்போன். 22

(இ-ள்) அகல் அரசு-விரிந்த இராஜ்ஜியம், மிடிகளும்-தரித்திரங்களும், நன்று எனப் புசிப்போன்-அநுபவிக்கத் தக்கன வென்றே அநுபவிப்பவன். எ-று. 22



சந்தே 26 மெய்யுங் கொண்டு.

**ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் புண்ணிய பாவநர் கதை 38 கவி.**

சாலமிகு தொழிற்பறவைக் கிடமாங் கூடு. 23

(இ-ள்) சால மிகு தொழில் பறவைக்கு-அத்தியந்தம் அலையும் வினை விகங்கத்திற்கு, இடம் ஆம் கூடு-இட மாகும் நீடத்தை (சரீரத்தை). எ-று. 23

சந்தே 27 ஆடவர் செய்தொழின்.

**பகவத் கீதை 6 அத்தியாயம் 16 கவி.**

யாதொன் றினைப்பெற் றவரிதனின் மிக்க
தொப்ப துண்டென்னர். 24

(இ-ள்) யாது ஒன்றினைப் பெற்றவர்-யாது ஒரு அவஸ்தா விசேஷத்தை யடைந்தோர்கள், இதனின் மிக்கது ஒப்பது-இதனினும் அதிக மானதும், சமாந மானது மான லாபம், உண்டு என்னர்-வேறு ஒன்று உண்டு என்று கருதார்களோ. எ-று. 24

சந்தே 30 ஐயா கேளீர்.

**பிரம கீதை 8 அத்தியாயம் 24 கவி**

அணுவினுக் கணுவு நானே யப்படி மகத்து நானே,
துணியிலெப் பொருளு நானே சோதியுட் சோதி நானே,

பணிவுறத் தகுவே னானே பழையனும் புருட னானே,
யிணைதனக் கில்லா வீச னாகிய வின்ப னானே, 25

(இ-ள்) அணுவினுக்கு அணுவும் நானே-சூக்ஷுமத்தில் (சூக்ஷுமமா யுள்ள) அணுவும் நானே யாகின்றேன், அப்படி மகத்தும் நானே-அது போலவே (பெரிதா யுள்ள மகத்துக்கட் கெல்லாம்) மகத் தாகவும் இருக்கின்றேன், துணியில்-சத்திய மாக, எப் பொருளும் நானே-எல்லாப் பதார்த்தங்களும் நானே யாகின்றேன், சோதி யுள் சோதி நானே-பிரகாசங்கட் கெல்லாம் பிரகாசங் கொடுப்பவனும் நா னாகின்றேன், நானே-(பரமேசுவர னாகிய) நானே, பணி வுறத் தகுவேன்-(எல்லாராலும்) வணங்கப்படுபவ னாகின்றேன், பழையன் ஆம்-புராதந னாகிய, புருடன் நானே-புருஷனும் நா னாகின்றேன், தனக்கு இணை இல்லா-தனக்குச் சமாநமில்லாத, ஈசன் ஆகிய-ஈசுர னாகிய, இன்பம் நானே-ஆநந்தமும் நானே யாகின்றேன். எ-று. 25

சந்தே 30 ஐயா கேளீர்.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் இக்ஷுவாகு கதை 43 கவி.**

திரண நுனிகள் விசும்பிரவி தேவ ருரகர் நரரிடத்தில்,
விரியு மறிவே நான்குறுக்கு மேல்கீ ழென்போ தப்பெருமை
யுலாவியது 26

(இ-ள்) திரண நுனிகள்-துரும்பின் முன் பாகங்கள், விசும்பு இரவி-விண் அருக்கன், தேவர் உரகர் நரர் இடத்தில்-நர நாக அமரரிடத்தில், விரியும் அறிவே



நான்-வியாபித்திருக்கும் சித்தே நான், குறுக்கு மேல் கீழ்-திரியக்கு ஊர்த்வம் அதம மென்னு மிடங்களில், என் போதப் பெருமை-என் னுடைய ஞாந மகிமை, உலாவியது-வியாபித் துள்ளது எ-று 26

சந்தே 30 ஐயா கேளீர்.

**ஷை ஷை 42 கவி.**

ஒன்றி லணுகே னென்சரைபற் றுள்ள மமதை யகங்கார,
மென்ற வொன்று மிலன், துன்று குணமூன் றிலன் சரைசா
விலனான் சுத்தன் றூவறிஞன்,
நின்ற சாந்தன் சமரச னான். 27

(இ-ள்) ஒன்றில் அணுகேன் நான்-யாது ஒன்றிலும் சம்பந்தியேன் யான், சரை பற்று உள்ளம் மமதை-ஜரை இராகம் மநம் மமதை, அகங்காரம்-அகங்காரம், என்ற ஒன்றும் இலன்-என்று சொல்லப்பட்ட ஒன்றும் இலன், துன்று குண மூன்றிலன்-(அநாதியாகப்) பொருந்துவ வென்று சொல்லாநின்ற மூன்று குணங்களு மில்லாதவன், சரை சாவிலன் நான்-ஜரா மரண வர்ஜிதன் யான், சுத்தன் தூ அறிஞன்-பரிசுத்தனும், மெஞ் ஞாநியும், நின்ற சாந்தன்-நிலை பெற்ற பிரம உபசாந்தனும், சமரசன் யான்-ஒப்பாய ரச முடையவனும் நா னாகின்றேன். எ-று. 27

சந்தே 42 நரரின் மன்னனைச்.

**ஈசுர கீதை 7 அத்தியாயம் 6 கவி.**

மாயை பல பண்ணு மவர் களி லரிநான். 28

(இ-ள்) மாயை பல பண்ணுமவர்களில்—மாயைகளநேகம் செய்பவர்களில் அரி நான்—விஷ்ணுவும் நானேயாகின்றேன். எ—று. 28

சந்தே 46 அநக மைந்தனே.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித் துவசன் கதை 60 கவி.**

மணியாழி யுலகமெல்லாம் கணநே ரத்தில்
விளையாடி வரும். 29

(இ-ள்) மணி ஆழி உலகம் எல்லாம்—இரத்திநங்களுள்ள சமுத்திரத்தை வரம் பாக உடைய பிரபஞ்ச முழுமையும், கண நேரத்தில்—க்ஷணப் பொழுதில், விளையாடி வரும்—விளையாடிக்கொண்டு வந்தாள். எ—று. 29

சந்தே 48 இலக்க மாயிரஞ்.

**வள்ளலார் சாத்திரம் 8 அதி ரகசியம் 49 கவி.**

நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே
நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையுஞ்,
சத்திய மிந்தச் சகமெனல் கருவி
தணத்திடா துடலநா னென்னல்,
கத்தபோத் தாவுந் தானெனல் தானுங்
கடவுளும் வேறெனக் கருதல்,
சித்துரு வாகி யிருந்துநா னாகேன்
சிவனெனல் சிதடர்பா லறியே. 30



(இ-ள்) பிராந்தி ஐந்தினையும்—பஞ்சப் பிராந்திகளையும், அன்று—(முற்) காலத்து, நித்தன் உரைத்த—பரம சிவன் உபதேசித்த, வாக்கியப்படியே—வாக்கியத்தின் பிரகாரமே, நிகழ்த்துவன்—கூறுவேன், இந்தச் சகம்—இந்த (நாச மடையாநின்ற) பிரபஞ்சத்தை, சத்தியம் எனல்-சத்தியம் என்று கருதுதலும், கருவி தணந்திடாது—கருவிகள் தளராதிருக்கின்ற, உடலை நான் என்னல்-சரீரத்தை அகம் என்று கருதுதலும், கத்த போத்தாவும் தான் எனல் அகந்தா மமதா விஷயமா யுள்ள கர்த்தாவும் போத்தாவும் தானெனலும், தானும் கடவுளும்—ஜீவாங்மாவும் பரமாங்மாவும், வேறு எனக் கருதல்—அங்நியம் என்று நினைத்தலும், சித்து உருவு ஆகி இருந்தும்—(தான்) சித் சொரூப மாக இருந்தும், சிவன் நான் ஆகேன்—பிரம சொரூபம் நான் ஆகேன், எனல்—என் றுண்டாகுதலும் (ஆகிய ஐந்து பிராந்தியினையும், சிதடர்பால் அறியே—மூடர்களிடத்து உணர்வா யாக. எ—று. 30

சந்தே 49 கைத வங்களை.

நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்ப்ப கோடி சதை ரபி. 31

(இ-ள்) கர்ம—கர்மம் ஆனது, கல்ப கோடி சதை அபி—நூறு கோடி கற்பங்களானாலும், அபுக்தம்—அநுபவியாது, க்ஷீயதே ந—நாசம் அடையாது. எ-று. 31

பகவத் கீதை 4 அத்தியாயம் 28 கவி.

எறியாவெரி வருகானிடை யெரியாதன வெவைதா,
னறியாவறி வுடையோர்களு மறிவாரது விதுபோற்,
குறியால்வரு குணஞானமெ யனலேகொள விடுமேல்,
பொறியால்வரு வினையானவை பொடியா மிதொர்
பொருளே. 31A

(இ-ள்) எரி எறியா வரு கானிடை—அக்கினி யானது சுவாலித் தெரித்துக் கொண்டு வருங் காட்டினிடத்தே, எரியாதன எவை—வெந்து நீருகாத விருக்ஷங்கள் யாவை, அது அறியா அறிவுடையோர்களும்—அதனை யறியாத குழவிப் பருவத்தினருங் கூட, அறிவார்—உணருவார்கள், இது போல்—இத் திருஷ்டாந்தம் போலவே, குறியால் வரு குண மெய் ஞானம்—விசாரத்தாற் ஜநியாநின்ற சற் குணங்களையுடைய தத்துவ ஞான மாகிய, அநல் கொள விடுமேல்—அக்கினியானது (பிரதிபந்த ரகிதமா) யெழுந்து வியாபித்திடு மாகில், பொறியால் வரு வினை யானவை—(நாம் கர்த்தா என்னும் பிராந்தி ஞானத்தா லுள தாகும் (புண்ணிய பாப ரூபமான) கர்மேந்தநங்க ளனைத்தும், பொடி ஆம்—(வெந்து) நீருய் விடும், இது ஓர் பொருளே—(ஞான அக்கிநிக்கு) கர்மேந்தநங்க ளோர் பொருளா (ஓர் பொரு ளென்று). எ-று. 31A

சந்தே 51 ஆனபாவிக.

சசி வங்ந போதம் 7 கவி.

மலமே வியதீ வினையின் வலியான்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்,



குலமே வியதென் புலவா ணர்களுங்
கொடிதா நரகங் குடியே றினரே. 32

(இ-ள்) மலம் மேவிய—பாவங்களைப் பொருந்திய, தீவினையின் வலியான்—கெட்ட கர்மங்களின் சாமர்த்தியத்தால், மகிழ்—சந்தோஷிக்கத் தக்க, உம்பரிர் பதத்தில் இருந்த—(தெய்வ லோகத்தில்) தேவ பதவியில் வசித்த, இவன்குலம் மேவிய—இந்தச் சசிவங்நனது குலத்திற் பொருந்தியிருந்த, தென் புலவாணர்களும்—பிதிர்க்களும், கொடி து ஆம் நரகம்—(மிகவும்) கொடிய தான (ரௌரவாதி) நரகத்தை, குடி யேறினர்—காணியாக்ஷியாக அடைந்தார்கள். எ-று. 32

சந்தே 53 அழிவி லாததற்.

ஞாந வாசிட்டம் 1 வைராக்கியப் பிரகரணம் 11 கவி.

வழிபடு மிதனை விட்டு மற்றுள நூல்க ளென்னுங்,
குழிகளிற் புரண்டஞ ஞாநக்
குணத்தினுற் பிறப்போர்க் கெல்லா,
மொழிவற வொருவர் செய்தற்
குரித்தன்ருய்த் தானே யுண்டாங்,
கழிதலிற் பரம வின்பங் கற்பங்க ளாலுங் கூடா. 33

(இ-ள்) வழி படும்-(வித்துவான்கள் எல்லா முறையானும் மேன்மைபடுத்தி) வணங்குவ தான, இதனை விட்டு—இத் திருசிய மறப்பை யொழித்து, மற்று உள—இதற் கிதர மாக (விரிந்து கிடக்கின்ற சப்த ஜாலங்களா)

லமைக்கப் பெற்ற, நூல்கள் என்னும்-சாஸ்திரங்கள் ளென்னும் பெயர் மாத்திரம் வாய்ந்த), குழிகளில்-(பரப் பிரம்ம விடய அபரோக்ஷ அநுபவ மின்றிப்) படு குழிக ளாகிய ஏற முடியாத கிடங்குகளில், புரண்டு-(தாங்களும்) உருண்டு தங்களைச் சேர்ந்தாரையும்) உருட்டி, அஞ்ஞாந குணத்தினல்-அறியாமையின் தன்மையால், பிறப்போர்க்கு எல்லாம்-(மீண்டு மீண்டு மோயாது) பிறந்து கொண்டிருப்பவர்க ளனை வருக்கும், ஒழி வற-கெடுத லின்றி, ஒருவர் செய்தற்கு-(அகாரண மாதலின்) யாவரானு மியற்றற்கு, உரித்து அன்ருய்-தக்க தன்ருய், தானே உண்டாம்-சுயமாகவே உண் டாகி விளங்கும், கழிதலில்-நித்திய சித்த மான, பரம இன்பம்-கைவல்லிய சௌக்கியம், கற்பங்களாலும் கூடா-ஆயிரங் கோடி பிரம ஆயுட்களாலும் உதியாதாம். எ-று. 33

சந்தே 56 மூவராம்பரன்.

சம்பந்தர் தேவாரம் திருப்பிரம புரம் 20 கவி.

படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை. 34

(இ-ள்) படைத்து அளித்து அழிப்ப-சிருட்டித்து இரக்ஷித்து சம்மரிக்க, மும் மூர்த்தி கள் ஆயினை-பிரம்மா விஷ்ணு ருத்திரன் ஆகிய திரி மூர்த்தியும் ஆகின்ருய். எ-று. 34

ஷ



பாகவதம் 11 ஸ்கந்தம் 2 அத்தியாயம் கவி 20.

குலவு மூவ ருருவமுங் கொண்டதே. 35

(இ-ள்) குலவு-விளங்காநின்ற, மூவர் உருவமும் கொண்டதே-மும் மூர்த்தி சொருபமும் நீயே யெடுத்தனை. எ-று. 35

சந்தே 57 ஈசர் காரியம்.

ஞாந வாசிட்டம் 1 வைராக்கியப் பிரகரணம் 10 கவி.

இறப்பிலா விந்த மோக மிறையுமீட் டெண்ண மின்றி,
மறப்பதே நல்ல தென்று. 36

(இ-ள்) இறப்பு இலா-(உளது போல் தோன்ருநின்ற அதிஷ்டாந ஞாநத்தா லன்றிக்) கெடாத, இந்த மோகம்-இச் சகப் பிரதீதியை, இறையும்-அணு வளவேனும், மீட்டு எண்ணம் இன்றி-மாறி நினைப்பு வாராதிருக்கும்படி, மறப்பதே-மறந்து விடுவதே, நல்லது என்று-நன்ருக வேண்டுமென்று. எ-று. 36

சந்தே 61 மனைவி லங்கரு.

பகவத் கீதை 9 அத்தியாயம் 20 கவி.

எப்பொரு டனக்கு மியானுைத் திருத்தலா லெனக்கி யாரு,
மொப்பர்க ளினிய ரின்ஞு தாரென வொருவ ரில்லை,

யிப்படி யறியு மன்பர் பக்கலே யானு நிற்ப,
எப்படி யவரு மென்பா லங்ஙன மமர்ந்து நிற்பார். 37

(இ-ள்) எப் பொருள் தனக்கும்–சர்வப் பிராணி களிடத்தும், யான்–(பரமேசுர னுன) நான், ஒத்து இருத்தலால்–சமான மாகவே இருத்தலினுல், எனக்கு-(பரமேசுர னுன) எனக்கு, யாரும் ஒப்பர்கள்–யாவரும் சமான மானவர்களே (யல்லாமல்), இனியர் இன்னுதார் என ஒருவர் இல்லை–இவர் பிரிய விஷயர் இவர் துவேஷ விஷய ரென ஒருவரு மில்லை, இப்படி அறியும் அன்பர் பக்கலே–(ஆயினும் என்னை) இவ்வா றறிந்து சேவியா நிற்கும் பக்தரிடத்து, யானும் நிற்பன்-நானும் (அநுக்கிரகஞ் செய்து) நிற்பேன், அப்படி அவரும்–அப்படி (என்னுல் அநுக்கிரகஞ் செய்யப்படும்) பக்தரும், என் பால்-என்னிடத்து, அங்ஙனம்–(முன் சொன்ன) அவ் விதமே, அமர்ந்து நிற்பார்–பொருந்தி நிற்பார்கள். எ-று. "எப் பொருள் தனக்கும்" என்பதில், தன் அசை. 37

சந்தே 61 மனைவி லங்கறு.

## பட்டினத்துப் பிள்ளையார் திரு விடை மருதூர் மும் மணிக் கோவை 16 அகவல்.

பொருதிடங் கொண்ட பொன்னி புரக்கு,
மருதிடங் கொண்ட மருத வாண,
நின்னது குற்ற முளதோ நின்னினைந்,
தெண்ணருங் கோடி யிடர்ப்பகை களைந்து,



கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா,
திறப்பையும் பிறப்பையு மிகழ்ந்து சிறப்பொடு,
தேவ ராவின் கன்றெனத் திரியாப்,
பாவிக டமதே பாவம் யாதெனின்,
முறியற் பெறுக்கன் முப்பழங் கலந்த,
வறுசுவை யடிசி லட்டினி திருப்பப்,
புசியா தொருவன் பசியால் வருந்துத,
லயினியின் குற்ற மன்று வெயிலின்வைத்,
தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப,
மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை,
தெண்ணீர்க் குற்ற மன்றுகண் ணகன்று,
தேன்றுளி சிதறிப் பூந்துணர் துருமி,
வாலுகங் கிடந்த சோலை கிடப்ப,
வெள்ளிடை வெயிலில் புள்ளிவெயர் பொடிப்ப,
வடிபெயர்த் திடுவா னொருவ,
னெடிது வருந்துத னிழற்றிங் கன்றே. 38

(இ-ள்) பொருது இடங் கொண்ட–(அலைகளை) மோதாநின்ற விசாலம் பொருந்திய, பொன்னி புரக்கும்–காவிரியினுல் சூழப்பெற்ற, மருது இடம் கொண்ட மருத விருக்ஷத்தை (தனது இருப்) பிட மாகக் கொண்டு (எழுந் தருளியு) ள்ள, மருத வாண–மருதீசுவரரே, நின்னது குற்றம் உளதோ–தேவரீர் பேரில் யாது குற்றம் உள்ளது (இல்லை என்றபடி), நின் நினைந்து–தேவரீரை (முக் கரணங்களானும்) வழிபட்டு, எண்ணரும் கோடி இடர்ப் பகை களைந்து–அளவிடக் கூடாத கோடி துன்பங்களையும் நிவர்த்தித்து, கண் உறு சீற்றத்துக் காலனை–கண்களில் கோபாக்கினி பறக்கும் இயமனை,

வதையாது-வதை செய்து, இறப்பையும் பிறப்பையும் இகழ்ந்து-மரணத்தையும் ஜநநத்தையும் வெறுத்து, சிறப்பொடு-மேன்மையோடு, தேவர் ஆவின் கன்று எனத் திரியா-தேவ லோகத்தி லுள்ள காம தேநுவின் கன்று போல இராத, பாவிகள் தமது பாவம் யாது எனின்-பாவிகளுடைய பாவம் என் என்று சொல்லுவது, முறியல் பெறுக்கல் முப் பழம் கலந்த-முறிந்தவற்றைப் பொறுக்கிய நன்றாகப் பழுத்து கசிந்த வாழை பலா மா சேர்ந்துள்ள, அறுசுவை அடிசில் அட்டு-சட் ரசங்களோடு கூடிய பதார்த்தங்களையுடைய சாதம் சமைத்து, இனிது இருப்ப-இனி தாய் (சூடோடு) வைத்திருக்க, ஒருவன் புசியாது-அதை ஒருவன் சாப்பிடாமல், பசியால் வருந்துதல்-பசியினாலே வருத்தத்தை யடைதல், அயினியின் குற்றம் அன்று-சாதத்தின் குற்றம் அல்ல. வெயிலின் வைத்து-அக்கினியில் வைத்துக் காய்ச்சி, ஆற்றிய தெண் ணீர்-குளிர்ந்த தெளிந்த ஜலமானது, நாற்றம் இட்டு இருப்ப (அதில் வெட்டி வேர் ரோஜா புஷ்பம் முதலியன) வாசனை (கமழப்) போட்டு வைத்திருக்க, மடா ஒருவன்-குடிக்காத ஒருவன், விடா வேட்கை-நீங்காத நீர் விருப்புடையனா யிருக்குதல், தெண் ணீர் குற்றம் அன்று-தெளிந்த ஜலத்தின் குற்றமல்ல, கண் அகன்று-விசாலமாக விரிந்து, பூம் துணர் துறுமி-அழகிய பூங் கொத்துகள் நிறைந்து, வாலு கங் கிடந்த-வெண்மையான மணலைப் பரப்பிய, தேன் துளி சிதறி-தேன்களானது துளி துளியாக தெளித்தது போலிருக்கிற, சோலை கிடப்ப-(பூஞ்) சோலைகள் அடர்ந்



திருக்க, வெள்ளி டை வெயிலில்-வெளியான இடத்தில் (உச்சி) வெய்யிலில், புள்ளி வெயர் பொடிப்ப-புள்ளி (புள்ளியாக) வெயர்வை வடிய (மணல் சுடும்படி), அடி பெயர்த்திடுவான் ஒருவன்-நடந்து செல்லுகின்ற ஒருவன். நெடிது வருந்துதல்-மிகவும் வருத்தத்தை அடைதல், நிழல் தீங்கு அன்று-நிழலின் குற்ற மல்ல. எ-று. ஏ-அசை. "பாவிகள் தமது" என்பதில், தம் அசை. 80

சந்தே 62 ஒன்று கேண்மகனே.

**பாகவதம் 11 ஸ்கந்தம் 4 அத்தியாயம் 45 கவி.**

மடல்வி ரிந்தம ரைமலர் வைகுவோன்,
சடம னைத்தையுந் தந்துமு வந்தில,
னிடர றுக்குமென் றெண்ணிநன் மாநுட,
வுடல்ப டைத்தபி னோகையுற் றனரோ. 39

(இ-ள்) மடல் விரிந்த-இதழ்கள் விரியப் பெற்ற, மரை மலர் வைகுவோன்-தாமரைப் புஷ்பத்தில் எழுந்தருளி யுள்ள பிரமா வானவர், சடம் அனைத்தையும் தந்தும்-சகல சடப் பிரபஞ்சங்களையும் சிருஷ்டித்தும், உவந்திலன்-சந்தோஷ மின்றியவனாய், இடர் அறுக்கும் என்று எண்ணி-(சர்வ) துன்பங்களையும் நிவர்த்திக்கும் என்று கருதி, நல் மாநுட உடல்-மேன்மை பொருந்திய மநுட சரீரத்தை, படைத்த பின்-சிருட்டித்த பின்னர், ஓகை உற்றான்-சந்தோஷம் அடைந்தனன். எ-று. அர் ஓ-அசை. "மரை" என்பது, தாமரை என்பதன் முதற் குறை. 39

சந்தே 63 இந்த ஞாநந்தான்.

### ஞாந வாசிட்டம் 5 உபசாந்திப் பிரகரணம் இதோபதேசம் 63 கவி.

கெடாதசிற் கண்ணு னீதான் கிளர்மே லவர்க ளுடனேதான்,
விடாதிவ் வுலகே தியாமாரென்
றுறைக்க மெல்ல விசாரிப்பாய்,
தடாதுட் பொருடேர் வித்தைக்கு
விசாரந் தனே தனிஞாநங்,
கடாவி யறியத் தக்கததிற்
காணும் ப்ாலின் மதுரம்போல். 40

(இ-ள்) கெடாத சித் கண்ணுல்-மறைபடாத தாய அத்தியாத்ம திருஷ்டியினுல். நீ தான்-நீ சுயமேயாதல், கிளர் மேலவர்களுடனே தான்-நிராசையை யுடைய சற் சநங்களுட ணுதல், விடாது-இடைவிடாமல், இவ் உலகு ஏது-இந்த ஜகத் தானது எவ் வாறுண்டாயது, யாம் ஆர்-(இந்த ஜகத் தாடம்பரத்தில் விளையாடித் திரியும்) நாம் யார், என்று-என்ப தாக, உறைக்க மெல்ல-அழுத்த மாக சாவதாந மாய். விசாரிப்பாய்-ஆராய்வாய். தடாது உட் பொருள் தேர் வித்தைக்கு-தடையில்லா மல் அத்யாத்ம வித்தைக்கு, விசாரம் தானே தனி-ஆராய்ச்சி தானே ஒப்பற்ற காரணம், கடாவி ஞாநம்-ஆராய்ந் தெழுந்த அந்த ஞாந மாம், அதில்-அதன்கண், அறியத் தக்கது-ஞேய மானது, காணும்-தோற்றும், பாலின் மதுரம் போல்-க்ஷீரத்தின்கண் ணுள்ள சுவை போல. எ-று. 40



சந்தே 63 இந்த ஞாநந்தான்.

### ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் சுரகு கதை 26 கவி.

முநிய கன்றபின் னெயினர்கோன் றனியிட
முந்திநன் மதியாலே,
யநிச நானென்ப தாரென நாடின னடிமுதன் முடியிருந்,
தனியு டம்பைநா னென்பது புதுமையாஞ்
சடவுடல் காண்கே னுன்,
றுனிசெ யிவ்வுட லசேதநந் தசைமுதற்
றுன்னுமா தலினன்றே. 41

(இ-ள்) முநி அகன்ற பின்-(ஸ்ரீமாண்டவிய) முநிவர் (உபதேசித்துப்) போன பின்னர், எயிநர் கோன்-வேடர் மன்னன், தனி யிடம் உந்தி-ஏகாந்த ஸ்தாநத்தை யடைந்து, நல் மதியாலே-(ஏகாக்கிர மான) தெளிந்த புத்தியாலே, அநிசம்-நிரந்தரம், நான் என்பது-அகம் என்று பிரதீதி யாவது, ஆர் என நாடினன்-யாது என்று ஆலோசித்துப் பார்த்தான். அடி முதல் முடி ஈரும் தனி உடம்பை-பாத முதல் கேச மீரு யுள்ள கேவல மிவ் வுடலை, நான் என்பது-அகம் என விடுவது, புதுமை ஆம்-(அதிக) ஆச்சரிய மாம், சட உடல் காண் கேன் நான்-ஜட மாகிய (இத்) தேகத்தை யா னுணர்கின்றேன், துனி செய் இவ் உடல்-துன்பத்தைத் தரும் இந்த தேகம், அசேதநம்-அறிவு அற்றது, தசை முதல் துன்னும் ஆதலின்-தோ லிரத்தம் எலும்பு இறைச்சி யாதி நிறைந் திருத்தலின். அன்றே-அல்லவோ. எ-று. 41

சந்தே 63 இந்த ஞாநந் தான்.

ஷ ஷ 27 கவி.

கரண மீரைந்து மந்நியஞ் சடமெனுங்
கணக்கின ஞனன்றித்,
திரளெ னக்கில வுடன்முத னலன்
சேடமே தெனநோக்கில்,
விரவு சீவனே சேடமா மின்னதும்
வேறென்ருற் றெரிகின்ற,
துரவி தானவே றென்றினுற் றெரியுமி
துயாந்ததத் துவமாகா. 42

(இ-ள்) கரணம் ஈர் ஐந்தும்—கருமேந்திரிய பஞ்சகமும், ஞாநேந்திரிய பஞ்சகமும், அந்நியம் சடம்—அயல் அசேதநம், எனும் கணக்கினல்—என்னும் யூகத்தால், நான் அன்று—அகம் அல்ல, இத் திரள் எனக்கு இல—இக் கூட்டம் என் சம்பந்தியு மல்ல, உடல் முதல் நான் அலன்—தேகம் முதலாக யானல்லன், சேடம் ஏது என நோக்கில்—எஞ்சுவதேதெனப் பார்க்கில், விரவு சீவனே—(இவற்ருேடுங்) கலந்த உயிரே, சேடம் ஆம்—எஞ்சுவ தாம், இன்னதும்—இவ் வுயிரும், வேறு ஒன்ருல் தெரிகின்றது—அய லொன்றினுலே அறியப் பெறுகின்றது, உர இது ஆன—திர வறிவான, வேறு ஒன்றினுல் தெரியும் ஈது—அய லொன்றினுலே அறியப் பெறுமிது, உயர்ந்த தத்துவம் ஆகா—மேலான வத்துவாக மாட்டாது. எ—று. 42



ஷ ஷ 28 கவி.

சந்தே 63 இந்த ஞாநந்தான்.

தெரிவ தாகிய விதனையு மகற்றுவன் றெரி பொருணுனுமோ,
பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம் பேரறி வியானுகு,
மரிய யன்சிவ னிந்திர னந்தக னுதியா மிடந்தோறுஞ்,
சுரிகொண் முத்தினுண் ணூலென நிற்குமாற்
றேன்றுமிவ் வுயர்போதம். 43

(இ-ள்) தெரிவது ஆகிய இதனையும்—அறியப் பெறுவதாகிய இவ் உயிரையும், அகற்றுவன்—(யா னல்லவென்று) விலக்குவன், தெரி பொருள் நான் ஆமோ—தெரியப்பட்ட வஸ்து யான் ஆவேனே, பெரிது சேடம் ஆய்—அத்தியந்தம் சேடித்து நின்ற, விகற்பம் அற்று—நிர் விகற்ப, அமலம் ஆம்—நிர்மல, பேர் அறிவு யான் ஆகும்—வியாபக சித் ரூபமே யா னுவேன், அரி அயன் சிவன்—விஷ்ணு பிரம்மா ருத்திரன், இந்திரன் அந்தகன் ஆதி ஆம் இடந்தோறும்—தேவேந்திரன் யமன் முதலியவரது தேகந்தோறும், சுரி கொள் முத்தினுள்—துவாரத்தோடு கூடிய முத்தி னுள்ளே, நூல் என நிற்கும்—தந்துவென ஊடுருவி நிற்கும், தோன்றும் இவ் உயர் போதம்—பிரகாசியாநின்ற (பகவா னுகிய) இந்த மேலான சேதநம். (எ—று) 43

சந்தே 67 இன்ன வாறந்தப்.

திரு மந்திரம் 8 தந்திரம் 13 நின்மலாவத்தை 15 கவி (2318).

தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்,
பின்னை யறிவது பேயறி வாகுமே. 44

(இ-ள்) தன்னை அறிவது—ஆன்மாவை உணர்வது, அறிவு ஆம்—ஞானம்ஆம், அஃது அன்றி—அ தல்லாமல், பின்னை அறிவது—அய லொன்றை உணர்வது, பேய் அறிவு ஆகுமே—(பேய் ஞான மாம்) பிராந்தி ஞானம் ஆம். எ—று. 44

சந்தே 72 நன்மை யாங்குரு.

பகவந் கீதை 18 அத்தியாயம் 36 கவி.

கறைசெயைம் புலன்களைக் கரண நான்குடன்,
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்,
பொறையொடு கல்வியும் பொருந்து ஞாநமும்,
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே. 45

(இ-ள்) கரணம் நான்குடன்—(அந்தக்) கரணங்கள் நான்கினுடனே, கறை செய் ஐம் புலன்களை—குற்றத்தை விளைவிப்பவைகளான (சுரோத்திர முதலிய பாகிய) இந்திரியங்களைந்தையும், துறை துறை அடக்கலும்—(அவைகளின்) கோளகைகளில் நிக்கிரகஞ் செய்யுஞ் சமதமங்களும், தவமும்—(சாரீரகம் வாசிகம் மாநசம் என்னும்) தவங்களும், தூய்மையும்—(மண் ஜலங்களால் சரீர) சுத்தியும் (மைத்திரியாதி குணங்களால் அந்தக்கரண சுத்தியும்), பொறையொடு—குரோதாதி விகாரங்களை யடையாத தன்மையும், கல்வியும்—சாஸ்திர ஞாநமும், பொருந்தும் ஞாநமும்—(அநுபவ பரியந்தம்)



பொருந்தாநிற்கும் விஞ்ஞாநமும், மறையவர் தொழில் என பிராமணரது சுபாவ ஜந்நிய கன்மங்களென்று, வகுக்கப்பட்டது—(சாஸ்திரங்களில்) வகுத்துச் சொல்லப்படுகின்றன. எ—று. ஏ. அசை. 45

ஷை

ஷை ஷை 37 கவி.

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையு,
நிலைமையுங் கிழ்ப்படா நெஞ்சி னீட்டமும்,
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்,
சிலைமலி தோளினு யரசர் செய்கையே. 46

(இ-ள்) தலைமையும்—ஈசுர பாவமும், கொடையொடு—தாநமும், தறுகண் ஆண்மையும்—ஒன்றிற்கும் அஞ்சாத சாமர்த்தியமும், நிலைமையும்—தைரியமும், கீழ்ப்படா நெஞ்சின் நீட்டமும்—(ஒருவர்க்கு) மடங்காத மநத்தி னுயர்ச்சியும், கொலை பயில் போர்களில்—கொல்லுதலைப் பொருந்திய யுத்தங்களில், புறம் கொடாமையும்—தோற்று ஓடாமையும் (ஆகிய இவை) சிலை மலி தோளினுய்—மலை போற் பருத்த புஜத்தினையுடைய அருச்சுநா, அரசர் செய்கை—க்ஷத்திரியரின் (விகித) கர்மங்களாம். எ—று. ஏ—அசை. 46

சந்தே 72 நன்மை யாங்குரு.

பகவந் கீதை 18 அத்தியாயம் 38 கவி.

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிபம்,
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்,
பழுதற விவர்களைப் பாது காத்தலே,
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே. 47

(இ-ள்) உழு தொழில்-(பூமியை) உழுது பயிர் செய்தலும், பசுக்களை ஓம்பல்-கோக்களை இரக்ஷித்தலும், வாணிபம் வழுவு அறச் செய்கையே-(கிரய விக்கிரய ரூப) வியாபாரம் வழுவாமற் செய்தலுமே, வணிகர் வாழ்க்கை ஆம்-வைசியரது (சுபாவ ஜந்ய) கர்மங்களாம், பழுது அற-குற்றம் அற, இவர்களைப் பாது காத்தலே-(பிராமண க்ஷத்திரிய வைசியர் என்னும்) இம் மூவருணத்தினர்க்கு (சிசுருஷை செய்து) பாதுகாத்தலே, வேளாளர்க்கு-சூத்திரர்க்கு, விழுமிய தொழில்கள் என்ப-(சுபாவ ஜந்ய மான) சிறந்த கர்மங்களாம் என்று கூறுவர் பெரியோர். எ-று. ஏ. அசை. 'வேளாளர்' என்பது, வேளாண்மை செய்வோர் என்னும் தொழிற் பொருளது. சூத்திரருக்கு இடுகுறியாக ஈண்டு வழங்கப்பட்டது. 47

சந்தே 72 நன்மை யாங்குரு.

பகவத் கீதை 18 அத்தியாயம் 39 கவி.

தீரா வகைதஞ் செயலே செயவே,
நாரா யணனு முதனா யகனுக்,
காரா தனையா மதனா லவனே,
வாரா வழியாம் வரமே தருமால். 48

(இ-ள்) தீரா வகை-விடாதபடிக்கு, தம் செயலே செய-தம் (வருணத்திற்குரிய முன் சொன்ன) கர்மங்களையே அநுஷ்டிக்க, நாராயணன் ஆம் முதல் நாயகனுக்கு-(அதுவே) நாராயண னென்னும் காரணப் பிரமத்திற்கு, ஆராதனை ஆம்-பூஜனை யாம், அதனால்-அந்தப் பூஜனையினால் அவனே-அந்த நாராயணனே, வாரா வழி ஆம் வரம் தரும்-பிறவா நெறி யாகிய வரந் தருவன். ஏ-ஏ-ஆல்-அசை. எ-று. 48



சந்தே 76 மதுவி ரைச்சிக.

பாகவதம் 4 ஸ்கந்தம் 5 அத்தியாயம் 12 கவி.

அயமகத்தினி லரசநீ படுத்தவம் மறிகள்,
செயிர்தழைந்துகண் டீயுக வரவுபார்த் திருக்கும்,
பயில்வி சும்புசெல் காலையில் வெருவரப்பாய்ந்து,
வயிறு போழும்வல் லிருப்பினொண் மருப்பினின் மாதோ. 49

(இ-ள்) அரச நீ-இராஜனே உன்னால், அய மகத்தினில்-அஜா மேத யாகத்தில், படுத்த-கொன்ற, அம் மறிகள்-அவ் வாடுகளானது, செயிர் தழைந்து-ரோமங்கள் சிலிர்க்க கோபத்தினைப் பொருந்தி, கண் தீ உக-கண்களில் நெருப்புப் பொறி பறக்க, வரவு பார்த்து இருக்கும்-(உன் னுடைய) வரவை எதிர்பார்த்து நிற்கும், பயில் விசும்பு செல் காலையில்-(வேள்வியின்) மகிமையால் தேவ லோகம் போகும் பொழுது, வல் இருப்பின் ஒண் மருப்பினில்-வலிமையுடைய இரும்பினது பிரகாசம் பொருந்திய (தனது) கொம்பினால், வெருவரப் பாய்ந்து-(நீ) பயப்படும்படி குத்தி, வயிறு போழும்-வயிற்றைக் கிழிக்கும் எ-று. மாது ஓ-அசை 49

சந்தே 76 மதுவி றைச்சிக.

### பாகவதம் 4 ஸ்கந்தம் 5 அத்தியாயம் 13 கவி.

படுத்திடு மறிகள் வேள்வி புரிந்தவன் பனிவி சும்பி,
னத்திடுங் கால நோக்கி யழல்விழி யொழுகப் பாய்ந்து,
வடித்தகா ரிருப்பிற் செய்த மருப்பினுல் வயிறு போழ்ந்த,
தெடுத்துநா முரைக்குங் கேட்டி யிறைவவென்
றுரைக்க லுற்றுன். 50

(இ-ள்) இறைவ-அரசனே, படுத்திடு மறிகள்-(அஜா மேத யாகத்தில்) கொல்லப்பட்ட ஆடுகள், வேள்வி புரிந்தவன்-யாகஞ் செய்தவன், பனி விசும்பின்-குளிர்ச்சி பொருந்திய செர்ர்க்க லோகத்திற்கு, அடுத்திடுங் காலம் நோக்கி-வருங் காலத்தை எதிர்பார்த்திருந்து, அழல் விழி ஒழுக-அக்கினி யானது கண்களினின்றும் பறக்க, வடித்த கார் இருப்பில் செய்த-கூர்மை பொருந்திய கரிய இரும்பினுல் செய்யப்பட்ட, மருப்பினுல் பாய்ந்து-கொம்புகளால் குத்தி, வயிறு போழ்ந்தது-வயிற்றைக் கிழித்ததை, நாம் எடுத்து உரைக்கும்-நாம் எடுத்துக் கூறுகின்ருேம், கேட்டி என்று உரைக்கலுற்ருன்-(நீ) கேட்பாயாக வென்று சொல்ல லுற்ருர். எ-று. 50

சந்தே 76 மதுவி றைச்சிகள்.

### பாகவதம் 4 ஸ்கந்தம் 5 அத்தியாயம் 54 கவி.

மகமி யற்றுழி மாய்த்தம றியெலாந்,
திகழி ருப்பினிற் செய்தம ருப்பினு,



னகுபொன் ஞட்டக நண்ணுபு ரஞ்சந,
னகடு கீண்டவ ழன்றெதிர் குத்தியே. 51

(இ-ள்) மகம் இயற்றுழி-யாகம் செய்த காலத்தில், மாய்த்த மறி எலாம்-கொல்லப்பட்ட ஆடுகளெல்லாம், திகழ் இருப்பினில் செய்த-விளங்காநின்ற இரும்பினுல் செய்யப்பட்ட, மருப்பினுல்-(தமது) கொம்புகளால், நகு பொன் நாட்டு அகம்-விரும்பத்தக்க (பிரகாசம் பொருந்திய) சுவர்க்க லோகத்திற்கு, நண்ணு-போகும் காலத்தில், அழன்று-கோபித்து, எதிர் குத்தி-எதிர்த்துக் குத்தி, புரஞ்சநன்-புரஞ்சந (அரச) னது, அகடு கீண்ட-வயிற்றைக் கிழித்தது. எ-று. ஏ-அசை. 51

சந்தே 76 மதுவி றைச்சிகள்.

### பாகவதம் 4 ஸ்கந்தம் 5 அத்தியாயம் 79 கவி.

பண்ணவ னகல வொன்றும் பற்றில ஞகிச் செங்கட்,
கண்ணனை யுளத்து நாடிக் கபிலன திருக்கை சார்ந்து,
விண்ணவர் வழுத்தும் வண்ணம் விழுத்தவம் பலவு மாற்றி,
அண்ணலந் தனிவீட் டின்ப மண்மின னரச ரேறே. 52

(இ-ள்) பண்ணவன் அகல-முனி சிரேஷ்டர் (இவ் வாறுபதேசித்து) செல்ல, அரசர் ஏறு-ஆண் சிம்மம் போன்ற பராக்கிரமத்தை யுடைய) அரசனுனவன், ஒன்றும் பற்றிலன் ஆகி-யாது ஒன்றினிடத்தும் விருப்பில்லாதவனுய், செம் கண் கண்ணனை-செந் தாமரை மலர் போன்ற கண்களை யுடைய கிருஷ்ண பகவானை, உளத்துள் நாடி-மநதில் தியாநித்து, கபிலனது இருக்கை

சார்ந்து-கபில முநிவரது ஆசிரமத்திற் போயிருந்து, விண்ணவர் வழுத்தும் வண்ணம்-தேவர்கள் துதிக்கும் படியாக, விழு தவம் பலவும் ஆற்றி-சிரேஷ்ட மிக்க அநேக தவங்களைச் செய்து, அண்ணல்-பெருமையிற் சிறந்த பகவானது, அம் தனி வீட்டு இன்பம்-அழகிய கேவல பிரம்மாநந்தத்தை, அண்மினன்-அடைந்தான். எ-று. ஏ-அசை. 'பலவும்' என்ற உம்மை. எச்சப் பொருட்டு. 52

சந்தே 76 மதுவி றைச்சிக.

பிரம கீதை 8 அத்தியாயம் 4 கவி.

திரமாம ருத்தத்தி னன்மைந்த ராலுந்
  தீராத வற்றின்றி யாகத்தி னலே,
யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா
  லுற்பந்ந மாம்விச்சை யாநிச்ச யத்தாற்,
பரமான வஞ்ஞாந வந்தத்தி லேயப்
  படிஞாந வுபதேச மொன்ருலு மேயிப்.
புரமாமு டம்புக்கு ளேயந்த முத்திப்
  பொருள்கண்டு விடெய்து வாரிப்பு விக்கே. 53

(இ-ள்) திரம் ஆம் அருத்தத்தினல்-ஸ்திர மான தநத்தினலும், மைந்தராலும்-புத்திரர்களாலும், தீ ராது-(ஒருவர்க்கு பிரம வித்தை) பொருந்தாது, அவற்றின் தியாகத்தினல்-அக் கரும முதலியவைகளினுடைய தியாகத்தினலும், உரம் ஆன-வலிமையான, வேதாந்த மா வாக்கியத்தால்-வேதாந்த மகா வாக்கிய சிரவணத்தால், உற்பந்நம் ஆம் விச்சை ஆம்-உண்டாகிய வித்தியாரூபமான, நிச்சயத்தால்-நிர்ணயிக்கப்பட்ட பொருளினலும், அப்படி ஞாந உபதேசம்-அவ் வண்ணமே ஞாநோபதேசம், ஒன்ருலும்-ஒன்றினலும், பரம் ஆன அஞ்ஞாந அந்தத்திலே-மேலான அஞ்ஞாநத்தினது நாச காலத்திலே, இப் புர மாம் உடம்புக்குளே-இந்த (பிரம) புர மாகிய சரீரத்தினுள், இப் புவிக்கே-இந்தப் பூமியின்கண்ணே, அந்த முத்திப் பொருள் கண்டு-அந்த முத்தி ரூபமான பிரமத்தைத் (தானகவே) கண்டு, வீடு எய்துவார்-முத்தி அடைவார்கள். எ-று. ஏ-அசை. 53

சந்தே 82 வகுத்த கர்மங்கள்.

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித்துவசன் கதை 65 கவி.

ஊன்றுறவொன் றைக்கருத வொன்றுவெளிப்
  படுங்குருவி னுபதே சத்தால். 54

(இ-ள்) ஊன்றுற ஒன்றைக் கருத-திடமாக ஒன்றை பார்விக்க, குருவின் உபதேசத்தால்-ஆசிரியரது அநுக்கிரகத்தால், ஒன்று வெளிப்படும்-ஒன்று பிரகடமாகும். எ-று. 54

சந்தே 84 சருவ முத்தியை.

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் ஐந்தவர் கதை 9 கவி.

பிரமனாமே சிருட்டியெலாம் பிறப்பதெம்பாலென்றுள்ளே,
திரமதான மநத்தாலே சிந்தித்துடலிற் சிந்தையற,
மரமதென்ன விருத்தலுமே வருநாட்
பலபோய் மநோபாவ,
முரமதாகி யயனாரொருப துலகமுளதான. 55

(இ-ள்) பிரமன் நாமே-(சதுர்முகப்) பிரமா யாமே, சிருட்டி எலாம் பிறப்பது எம்பால்-சர்வ சிருட்டிகளும் உண்டாவது எம்மிடத்தினின்றும், என்று உள்ளே-என்று ஆந்தரத்தில், திரமது ஆன மநத்தாலே-திடமான சித்தத்தினாலே, சிந்தித்து உடலிற் சிந்தையற-தியாநித்து தேகத்தில் உணர்ச்சி யற்று, மரமது என்ன இருத்தலும்-தரு விரதர்களா யிருந்து தவம் புரிந்த போது, வரு நாள் பல போய்-அநேக காலங் கழிந்த பின், மநோ பாவம் உரமது ஆகி-புத்தியின் பாவனை அதி திடமாகி, அயன் ஆனார்-பிரமா ஆயினார், ஒரு பது உலகம் உளது ஆன-இப் பத் தண்டங்களு முண்டாயின. எ-று ஏ-அசை. 55

சந்தே 85 சடம தாகிய.

### பகவத் கீதை 8 அத்தியாயம் 6 கவி.

இந்த வுடலம் விடும்பொழுதி யாவ னியாதொன்
றினை நினைந்தா,
னந்த வளவே யந்தப்பா வனையா லதனை யடையுமா,
லென்ற னியல்பே யெப்பொழுது மிதயத்
திடை கொண் டென்பாலாஞ்,
சிந்தை யொடும்வா ளமர்தொடங்கி லதனா
லெனையே சேருதியால். 56

(இ-ள்) இந்த உடலம் விடும் பொழுது-இந்தச் சரீர மரண காலத்தில், யாவன்-யாவன் ஒருவன், யாது ஒன்றினை-யாதொரு தேவதா விசேஷத்தை யாவது அந்நிய மான யாதேனு மொரு பிரியாப்பிரிய விஷயத்தை யாவது, நினைந்தான்-ஸ்மரணஞ் செய்பவனாய் இச் சரீரத்தைப் பரித்தியாகஞ் செய்வனோ, அந்த அளவே-(அவன் அம் மரணத்தின் பின்) அந்த ஸ்மரணத் தளவே, அந்தப் பாவனையால்-அந்தப் பாவநா திடத்தால், அதனை அடையும்-அந்தப் பொருளையே அடையாநிற்பன், என் இயல்பே-(பரமேசுரனான) எனது சுபாவத்தையே, எப் பொழுதும்-சர்வ காலத்தும், இதயத்திடை கொண்டு-மநத்தின்கண்ணே (சிந்தனையாகக்) கொண்டு, என்பால் ஆம் சிந்தையொடும்-என்னிடத்துள்ள சிந்தநத்தோடும், வாள் அமர் தொடங்கில்-வாளமர் செய்யில், அதனால்-(என்னிடத் தர்பித்த மநம் புத்தி யுடையவனாய்) யுத்தஞ் செய்வதனால், எனையே சேருதி-என்னையே அடைவாய். எ-று தன் ஆல்-ஆல்-அசை நிலைகள். 56.

சந்தே 88 இந்த நிச்சய.

### ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் இக்ஷுவாகு கதை 58 கவி.

அன்னான் சமமா யழிவில்லா வாந்மா-வாய்நின் றின்பமுறு
மென்னா கினுமொன் றுடுப்பவனா
யென்னா கினுமொன் றுண்பவனா,
யுன்னா தெங்கா கினுமொருபா
லுறங்கு வோனா யாங்கவனே,

பொன்னார் பூமி முழுதாளும்
பூபா லனைப் போற் பொலிவுறுமால், 57

(இ-ள்) அன்னான்-அவ் வறிவின னனவன், சமம் ஆய் அழிவு இல்லா-ஒப் பாய் நித்திய மான, ஆத்மா ஆய்-பரமாத்ம சொருப மாய், நின்று இன்பம் உறும்-நிலை பெற்று ஆநந்தத்தை அடையும், என்னாகினும் ஒன்று உடுப்பவன் ஆய்-ஏ தாவது ஒன்றை சுற்றிக் கொள்பவ னாய், என் ஆகினும் ஒன்று-ஏதாவது ஒன்றை, உண்பவன் ஆய்-அருந்து (குடிப்) பவ னாய், உன்னா து-ஆலோசியாமல், எங்காகினும் ஒருபால்-எவ் விடத்தாகிலும் ஓரிடத்தில், உறங்கு வோன் ஆய்-நித்திரை செய்பவ னாய், ஆங்கு அவனே-இருக்கப் பெற்ற அத் தகைய சீவந் முத்தனே, பொன் ஆர் பூமி முழுது ஆளும்-ஐசுவரியம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் அரசு செய்யும், பூ பாலனைப் போல் பொலிவுறும்-சக்கரவர்த்தியைப் போல இலங்கா நிற்பன். எ-று. ஆல்-அசை. 57

சந்தே 90 மாயை யென்பது.

**ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் இக்ஷ்வாகு கதை 31 கவி.**

இதுவே நன்றி தன்றென்னு மிதுவே வித்தா
மிடரொழுங்குக்கு. 58

(இ-ள்) இதுவே நன்று-இது தானே நல்லது, இது அன்று என்னும்-இது அல்ல வென்னும், இது வே வித்தாம்-இது தானே விரையாம், இடர் ஒழுங்குக்கு-துக்க பரம்பரைக்கு. எ-று. 58



சந்தே 92 சொப்ப னந்தனிற்.

**பஞ்ச தசி 2 பஞ்ச பூத விவேகம் கவி 31.**

பிரமத்தோ ரிடத்தல் லாது பிறங்குரு தன்ன தெங்கும்,
வருகுட சத்தி மென்மை மண்ணினி னிகழு மாபோ,
லொருபத மனைத்தா மீதி னொளிரும் முப் பதமற்றுண்டு,
சுருதிபோ ரிடத்து மாயை துன்னிடு மென்றுஞ் சொல்லும். 59

(இ-ள்) வரு குட சத்தி-உண்டாகாநின்ற குடத்தின் சத்தி யானது, மென்மை மண்ணினில்-நெகிழ்ச்சி யான மண்ணில், நிகழும் ஆ(று) போல்-உண்டாம் முறைமை போல. அன்னது-அம் மாயை யானது, பிரமத்து-பிரமத்தினிடத்து, ஓர் இடத்து அல்லாது-ஏக தேசத்தி லல்லாமல், எங்கும் பிறங்குறுது-எவ்விடத்தும் தோன்றமாட்டாது, ஈதின் ஒரு பதம் அனைத்து ஆம்-இந்தப் பிரமத்தில் ஓர் பாதத்தில் சகல பிரபஞ்ச மான மாயை யாம், மற்றும் ஒளிரும் முப்பதம் உண்டு-பின்னும் பிரகாசம் பொருந்திய மூன்று பாகங்க ளிருக்கின்றன, சுருதி-சுருதி யானது, மாயை-மாயை, ஓரிடத்து துன்னிடும்-ஒரு பாதத்தில் பொருந்தி யிருக்கும், என்றும் சொல்லும்-என்றும் கூறுகின்றது. எ-று. 59

சந்தே 93 பொய்யை மெய்யென்ற.

பிரம கீதை 4 அத்தியாயம் 59 கவி.

ஈசனு ஞாநி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத்,
தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி
லிருப்பது மன்னி,
மாசிலாப் பரம ஞாநியா முநிக்கு மகேசனு
மொப்பலன் மதிக்கி,
லாசிலா வரியுமொப்பலனுனு மொப்பல னேவரொப் பாரே. 60

(இ-ள்) ஈசன் ஆம் ஞாநி—ஈசுவர சொரூப னுகிய ஞாநி யானவன், இருந்துள விடத்தே—வசிக்கின்ற இடத்திலேயே, முத்தி யிருப்பது—மோக்ஷ மானது இருக்கின்றது, அந்தத் தேசிகன்—அந்தக் குரு நாத னுடைய, ஏவல் செய்பவன் கால்—பணிவிடை செய்பவ னுடைய பாதம், என் சென்னியில்—எனது சிரசின்மீது, மன்னி இருப்பது—நிலையா யிருக்கின்றது, மதிக்கில்—ஆராயுமிடத்து, மாசு இலா—குற்ற மில்லாத, பரம ஞாநியாம் முநிக்கு—பிரம ஞாநி யாகிய முநிவனுக்கு, மகேசனும் ஒப்பலன்—உருத்திரனுஞ் சமாநமாக மாட்டான், ஆசு இலா—ஆசிலா அரியும்-தோஷ மில்லாத திருமாலும், ஒப்பலன்—சமாந மாக மாட்டான், யானும் ஒப்பலன்—(பிரம னுகிய) நானும் சமானமாகமாட்டேன், ஏவர் ஒப்பார்—ஏன் (என்ருல்), ஏவர் ஒப்பார்—யாவர் தாம் சமாந மாவார்கள். (ஒருவரும் இலர் என்றபடி). எ—று. ஏ—அசை. 60

சந்தே 96 அருவ மாகு மாயாவி.



ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் பாலன் கதை 1 கவி.

முழுதுசத் தியுமாய்ப் புரணமா யென்று
முடிவறு பிரமமா வதுதான்,
பழுதின்ஞா நிகடம் மநமலா தில்லைப்
பரமமா மிதிலிலா தில்லை,
யெழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவைகளோர்
காலமொன் றுளதாம்,
வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு
முடல்களிற் ரேன்றும். 61

(இ-ள்) முழுது சத்தியும் ஆய் புரணம் ஆய்—சர்வ சத்தி யுடைய தாய் ஆபூர்ண மாய், என்றும் முடிவு அறு—நித்திய மாய் அவ்வியய மாய், பிரமம் ஆவது தான் (இலங்கும்) பிரம சொரூப மாவதுவே, பழுதில் ஞாநிகள் மநம்—தடையற வுணர்ந்த பிரபுத்தர்களின் மநம், அலாது இல்லை—(அது பிரமமே யாவது) அய லொன் ருகாதாம். பரமம் ஆம் இதில்—உயர்ந்த தாகிய இதன்கண், இலாது இல்லை—இல்லாதது இல்லை, எழுது அரும் சத்திகணக் கில்லாத சத்திகளுடன் கூடியபடி, யாவும் ஆய் இலங்கும்—எல்லா மாகி விளங்கும், இவைகள்—இச் சத்திகளுள். ஓர் காலம் ஒன்று உளது ஆம்—ஒவ்வொரு போதில் ஒவ் ஓரிடத்தில் ஒவ் ஒரு சத்தி உல்லாச முறும், வழுவு இலாப் பிரமம் உடைய-கெடாத பிரம சம்பந்தியாய. சித் சத்தி-சித் சத்தி யானது. மறி தரும் உடல்களில் தோன்றும்- துன் புருநின்ற சரீரங்களில் புலப்படும். எ—று தம்-அசை. 61

சந்தே 96 அருவ மாகுமா யாவி.

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் பாலன் கதை 2 கவி.

காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங்
கனலிலே சூடும்வான் றனிலே,
தோற்றலா மையுநன் னீரிலே நெகிழ்வுந்
தொலைவுறு மாய்விலே மாய்வு,
மூற்றமாம் விதையின் மரங்களும் போல
வுள்ளுறை பிரமசத் திகடா,
மாற்றல்சால் கால தேசசித் திரத்தா
லவனியிற் சாலிபோற் றோன்றும். 62

(இ-ள்) காற்றிலே அசைவும்-வாயுவின்கண் ஸ்டாந்த சத்தியும், கல்லிலே திடமும்-பாஷாணத்திலே கடிந சத்தியும், கனலிலே சூடும்-அக்கினியில் உஷ்ண சக்தியும், வான் தனிலே-ஆகாயத்திலே, தோற்றலாமையும்-சூநிய சத்தியும், நன் நீரிலே நெகிழ்வும்-நல்ல ஜலத்திலே நெகிழ்ச்சித் தன்மையும், தொலைவுறு மாய்விலே மாய்வும்-கெடும்படியான விநாசப் பொருள்களில் நாச சக்தியும், உள் ளுறை பிரம சத்திகள்-(ஆகிய) அந்தர் ஸ்திதி பெற்ற சித் சத்தியே முதலிய சகல சத்திகளும், விதையின் மரங்களும் போல-பீஜத்தில் அநேக அவயவ தருக்களும் போல, ஊற்றம் ஆம்-பதிந்து கிடக்கும், ஆற்றல் சால் கால தேச சித்திரத்தால்-சத்திகளானது போதியது உற்ற வழி கால தேச விசித்திரத் தினது தன்மையால், அவனியில்-பூமியில், சாலி போல் தோன்றும்-நெற்களைப் போன்று தோன்றும். எ-று. "வான்தனில்" என்பதில், தன் தாம் அசை. 62



சந்தே 100 கருப்பை முட்டையுட்.

சாங்கு சித்தர் திரு வாக்கு.

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்,
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்-உருப்பெற்றால்,
ஊட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள்,
வாட்டமு னக்கேன்ம கிழ். 63

(இ-ள்) கருப்பைக்குள்-கர்ப்பப் பையினுள் (இருக்கும்), முட்டைக்கும்-முட்டைக்கும், கல்லினுள் தேரைக்கும்-கல்லி னுள்ளே (யிருக்கும்) தவளைக்கும், விருப்பு உற்று-பிரியத்தோடு, அமுது அளிக்கும்-தீனியைக் கொடுக்கும், மெய்யன்-பரமசிவன், உரு பெற்றால்-ஓர் சரீரத்தை அடைந்தால், ஊட்டி வளர்க்கானோ-(இறையைக்) கொடுத்து வளரச் செய்யானோ, ஓ கெடுவாய்-ஆச்சரியம் மதியின்மையளே, அன்னாய் கேள்-தாயே கேட்பாயாக, உனக்கு வாட்டம் ஏன்-உனக்கு துக்கம் எதற்கு, மகிழ்-சந்தோஷத்தோடு போவாயாக. எ-று. 63

ஷ

ஈசுர கீதை 6 அத்தியாயம் 20 கவி

உற்பவசராசரவி யோநியொரு நாலும்,
பற்பலவ தாகமொழி பாதலம னைத்தும்,
எப்புவந மும்பிரமர் அண்டமவை யாவும்,
இப்படியி ருக்குமது வென்றனிய மத்தால். 64

(இ-ள்) என் நியமத்தால்-(பரமேசுர ஞகிய) எனது நியாமகத்தால், உற்பவ சராசர யோநி ஒரு நாலும்-உத்பவிக்காநின்ற சராயு ஜம் அண்ட ஜம் சுவேத ஜம் உத்பிஜ் ஜம் என நான்கு பிரகார மாய் ஜநிக்கின்றவைகளும், பல் பலவது ஆக மொழி பாதலம் அனைத்தும்-அதல முதல் பாதாள வரையி லுள்ள கீழ் ஏ ழுலகங்களும், எப் புவநமும்-இன் னும் பூலோக முதல் சத்திய லோகம் வரையி லுள்ள மே லே ழுலகங்களும், பிரமர் அண்டமவை யாவும்-பிரமாண்ட முதலியனவும், இப்படி இருக்குமது-இவ் வாறே இருக்கும். எ-று. தன் அசை. 64

சந்தே 102 வாயுந் தர்ப்பநஞ்.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் காதி கதை 1 கவி.

பிறப்பிறப்பாம் பெயருடைய விந்த மாயைப்
பெருமையினை முடிவுபெறப் பேச வொண்ணு,
வறப்பெரிய தன்மநத்தை வென்ருன் மாளு
மல்லதொரு வகையாலு மகற்ற லாகா,
சிறப்புடைய வன்மாயை விரிவி னுள்ள
சித்திரந்தோன் றிடவுனக்குச் செப்புங் காதை,
மறப்பறுசிந் தையனுகிக் கேட்டி யென்னு
மநுகுலநா யகனுக்கு வசிட்டன் சொல்வான். 65

(இ-ள்) பிறப்பு இறப்பு ஆம் பெயர் உடைய-ஜநந மரண சம்சார மென்னும் நாமதேயம் பொருந்திய, இந்த மாயைப் பெருமையினை-இம் மகா மாயையினது



மகாத்மியத்தை, முடிவு பெற-இவ்வளவு தான் என்று. பேச ஒண்ணு-கூற முடியாது, அறப் பெரிய தன் மநத்தை வென்ருல்-மெத்தப் பெருத்த தனது சித்தத்தைச் சயித்தால் மாத்திரம், மாளும்-நாசமெய்தும், அல்லது ஒரு வகையாலும்-வேறொரு வகையினுலும், அகற்றல் ஆகா-விநாசமடையா தாம், சிறப்பு உடைய-அநேக விசேடங்களை யுடைய, வல் மாயை விரிவின் உள்ள-வலிய சம்சார விஸ்தாரத்தி லிராநின்ற, சித்திரம் தோன்றிட-விசித்திரம் விளங்கும் பொருட்டு, உனக்கு-நின்றனக்கு, செப்பும் காதை-உபதேசிக்கும் கதையை, மறப்ப அறு சிந்தையன் ஆகி-ஒருமையோடுங் கூடிய சித்தத்தை யுடையவனுய், கேட்டி என்னு-கேட்பா யாக வென்று, மநு குல நாயகனுக்கு-மநு வம்சத்தை விளக்க அவதரித்த வள்ளலுக்கு, வசிட்டன் சொல்வான்-ஸ்ரீ வசிட்ட பகவான் உபதேசிக்கத் தொடங்கினுர். எ-று. 65

சந்தே 105 ஞாநங் காரண.

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் கசன் கதை 13 கவி.

பொய்யதாம்முயற் கொம்பினைப் பற்றவும்
போக்கவும் நினைப்பாரஈ,
ரையனேபர போதபூ ரணத்திலே
யயலொன்று வருமாறென்,
பொய்யதாகிய வநேகபா வனையினைப்
பொருந்தல்புன் பிறப்பாகு,

மையமின்றிய வேகபாவனையினி
லழுந்துதல் பவந்தீர்தல். 66

(இ-ள்) பொய்யது ஆம் முயல் கொம்பினை-அத்தியந்தம் துச்சமே யாய சச விஷாணத்தை, பற்றவும் போக்கவும்-கொள்ளவும் தள்ளவும், நினைப்பார் ஆர்-எண்ணுவோர் யாவர், ஐயனே பரபோத பூரணத்திலே-இராகவனே பர ஞான வியாபகத்திலே, அயல் ஒன்று வரும் ஆறு என்-வேறொன்று வருங் காரணம் என்னே, பொய்யது ஆகிய-அசத் தாகிய, அநேக பாவனையினை-நானா எண்ணங்களை, பொருந்தல்-கூடுதல், புன் பிறப்பாகும்-கீழான ஜன்ம ஏதுவாம், ஐயம் இன்றிய-சம்சய மில்லாத, ஏக பாவனையினில்-ஒரே வஸ்துவின் றியானத்தில், அழுந்துதல்-நிருவிகற்ப பரியந்தம் செல்லுதல், பவம் தீர்தல்-ஜநந மரணந் தீர்க்கும் காரண மாம். எ-று. 66

ஷ

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் மநந்தின் கதை 4 கவி.

எங்கே யெனினுந் தோன்று மிந்த மனதை முத்திச்,
சங்கே தத்தா லூகந் தன்னிற் கூட்டி னன்றும். 67

(இ-ள்) எங்கே எனினும் தோன்றும் இந்த-எக் காரணத்தாலேனும் (மயலாற்) புலப்படும் இம், மநத்தை-மநத்தை, முத்திச் சங்கேதத்தால்-மோக்ஷம் அடைவதற்காக, ஊகம் தன்னில் கூட்டில் நன்றும்-முத்தி யுத்திகளிற் சேர்ப்பிப்பின் மிக்க நல முடைத்தாம். எ-று 67



சந்தே 105 ஞாநங் காரண.

ஞாந வாசிட்டம் 4 பிரகரணம் தாசூரன் கதை 19 கவி.

யாதினிற்றோன் றியதென்று மியாதீ தென்று
மிறந்தநெறி யாதென்று மிறந்தாற் றோன்று,
மாதலினால் வன்றுயரின் சாலை யான
வவித்தையெனு நோய்க்குமருந் தருந்தச் செய்தால். 68

(இ-ள்) யாதினில் தோன்றியது என்றும்-எதனினின்றும் உண்டாயது என்றும், யாது ஈது என்றும்-எவ்வாறு என்றும், இது இறந்த நெறி யாது என்றும்-நஷ்ட மெங்ஙன மென்றும், இறந்தால் தோன்றும்-நசிக்கின் யாவுமே புலப்படும், ஆதலினால்-ஆகையால், வன் துயரின் சாலை ஆன-கொடிய துக்கங்களின் இடமான, அவித்தை எனும் நோயக்கு-அவித்தை என்னும் ரோகத்திற்கு, மருந்து அருந்தச் செய்தால்-அவுடதம் புசிக்கப்பண்ணின். எ-று. 68

சந்தே 106 அசத்தி லெம்மட்டுண்.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் சுரகு கதை 23 கவி.

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப்
பரஞ்சுடரா யெறிக்குஞ் சோதி,
யத்தனையத் தனைதோன்றும். 69

(இ-ள்) எத்தனை எத்தனை நீத்தாய்-எவ்வளவு எவ்வளவு விட்டாயோ, அகிலத்தைப் பரஞ் சுடர் ஆய்-

விடயங்களைப் பர ஆலோக மாய், எறிக்கும் சோதி-இலக்கும் சோதியானது, அத்தனை அத்தனை தோன்றும்-அவ் வளவு அவ் வளவு பிரதீதி யாம். எ-று. 69

சந்தே 109 தாமதமி ராசதஞ்.

**திரு நாவுக் கரசு தேவாரம், அங்க மாலை 11 கவி.**

இறுமாந் திருப்பன்கொலோ யீசன் பல்கணத்
    தெண்ணப்பட்டுச்,
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென் றங்
    கிறுமாந்தி ருப்பன்கொலோ. 70

(இ-ள்) ஈசன் பல் கணத்து எண்ணப்பட்டு-சிவ பெருமா னுடைய கணங்களோடு (யானு மொருவனாகக்) கருதப்பட்டு, இறுமாந்து இருப்பன் கொலோ-ஏமாப் புற்று இருப்பேனோ, சிறு மான் ஏந்தி தன்-மான் கன்றைக் கரத் தேந்தி யுள்ள சிவ பெருமா னுடைய, சே அடிக் கீழ் சென்று-திரு வடியின் கீழ் போய், இறுமாந்து இருப்பன் கொலோ-சந்தோஷ முற்று இருப்பேனோ. எ-று. அங்கு அசை. 70

சந்தே 111 இகமான குந்நாத.

**ஞான வாசிட்டம் 5 பிரகரணம் ஜநகன் கதை 10 கவி.**

அறிவானு மறிபொருளுங் கூடியகூட்
    டரவிலெழு மறிவா நந்தம்,
பிறியாத வாந்மதத் துவத்தெழுந்த தாமதனைப்
    பேணல் செய்வாம். 71



(இ-ள்) அறிவானும்-திருஷ்டாவும், அறி பொருளும்-திருசியமும், கூடிய கூட்டரவில் எழும்-நற் சேர்க்கையில் கிளம்பும், அறிவு ஆநந்தம்-பிரத்யய ஆநந்த நிச்சயம், பிறியாத ஆந்ம தத்துவத்து எழுந்தது ஆம்-அபேத மாய (தனது) ஆந்ம தத்துவத்தினின்றும் உண்டாய தாம், அதனை-(அசையாத) அப் பொருளை, பேணல் செய்வாம்-விகற்ப மின்றி நன்கு உபாசிப்பாம். எ-று. 71

சந்தே 114 இருளாக மூடுஞ்.

**பிரம கீதை 8 அந்தியாயம் 18 கவி.**

சீவ னன்று புரமூன்றிற் சித்தா மவனே விளையாடு,
மேவு மெல்லா மெய்போல வவனால் விளைத லான்மெய்யத்,
தேவ னேசான் றுதலினாற் சித்து மவனே யத்துவிதன்,
யாவுந் தானு தலினெதினுந் தனையே விரும்ப லாலின்பன். 72

(இ-ள்) புரம் மூன்றில்-அவஸ்தைகள் மூன்றினும், சித்தா மவனே-சித் தாகிய பரம சிவனே, விளையாடும்-விளையாடுகின்றான், சீவன் அன்று-சிதாபாசன் அல்ல, அவனால்-அந்தச் சிவனால், மேவும் எல்லாம்-பொருந்திய யாவும், மெய் போல்-சத்தியம் போல, விளைதலால்-உண்டாதலால், அத் தேவனே மெய்-அத் தேவனே சத்தாவான், சான்று ஆதலினால்-எல்லாவற்றிற்கும் சாக்ஷியா யிருத்தலினால், சித்தும் அவனே-சித்ரூபனும் அந்தத் தேவனே, யாவும் தான் ஆதலின்-எல்லாமுந் தானா யிருத்தலின், அத்துவிதன்-இரண் டற்றவன்,

எதினும் தனையே—எல்லாவற்றினும் மேலாகத் தன்னேயே, விரும்பலால் இன்பன்—விரும்புகின்றபடியால் ஆநந்த ரூபனு மவனே. எ—று. 72

ஷ

ஷ ஷ 19 கவி.

இந்தப் புரங்க ளொருமூன்று மிவன்ற
னிடையே யிறப்பதுநிர்த்,
தொந்தப் புருட னொருகாலு நசியா
னுத லாற்சொல்லு,
மந்தப் பரம னேயவன்ரு னறியா
மையினு லப்பரனைப்,
பந்தப் படுமோர் சீவனெனப் பார்ப்பார்
பவத்தே பதைக்கின்றுர். 73

(இ—ள்) இந்தப் புரங்கள் ஒரு மூன்றும்—இந்தப் புரத் திரயங்களும், இவன்த னிடையே இறப்பது—இவனிடத்திலேயே லயத்தை யடைவது, நிர்த்தொந்தப் புருடன்—யாது ஒரு தொந்தமு மின்றிய புருஷ னெனவன், ஒரு காலும் நசியான்—ஒரு பொழுதும் நாசத்தை யடையான். ஆதலால்—அக் காரணத்தால், சொல்லும் அந்தப் பரமனே—சொல்லிய அந்தப் பரமசிவனே, அவன்—அவனுவன், அறியாமையினுல்—(அவனை) அஞ்ஞாநத்தினுல் உணராமல், அப் பரனை—அந்தப் பரம சிவனை. பந்தப்படும் ஓர் சீவன் என—பந்தத்தை யடைகின்ற ஒரு சீவன் என்று, பார்ப்பார்—பார்ப்பவர்கள், பவத்தே பதைக்கிறுர்—ஜநநத்தை யடைந்து துன்புறுகின்றுர்கள். எ—று. தான்—அசை. "இவன் தன்" என்பதில் தன் அசை. 73



சந்தே 114 இருளாக முடுஞ்.

பிரம கீதை 10 அத்தியாயம் 12 கவி

காண்டல் கேட்டல்க ருதல்செ யப்படு வானலன்ருன்,
காண்டல் கேட்டல்க ருதல்செ யப்படு வானெருத்தன்,
தூண்டு சோதியி னுலனல் சோமன ருக்கனெல்லா,
மாண்ட போதுவி ளங்குமன நக்கரி யாகிநின்றே. 74

(இ—ள்) தான்—அந்தர்யாமி, காண்டல் கேட்டல்—காணப்பட்டவனும் கேட்கப்பட்டவனும்? கருதல் செயப்படுவான் அலன்—கருதப்பட்டவனு மல்லன் காண்டல் கேட்டல்—(தான்) திருஷ்டா வாயும் சுரோதா வாயும், கருதல் செயப்படுவான் ஒருத்தன்—மந்தர வாயுமிருக்கின்ற ஒருவன், அநல் சோமன் அருக்கன்—அக்கிநி சந்திரன் சூரியன், எல்லாம் மாண்ட போதும்—அனைத்தும் அழிந்த காலத்தும், தூண்டு சோதியினுல்—தன் னுடைய மிகுந்த பிரகாசத்தினுல், மநக் கரி ஆகி நின்று விளங்கும்—மநோ சாக்ஷி யாய் இருந்து விளங்குகின்றுன். எ—று. 74

சந்தே 114 இருளாக முடுஞ்.

பிரம கீதை 10 அத்தியாயம் 13 கவி.

சித்த மத்த மித்தி டத்த பாவ முந்தெ ரிந்திடும்,
சுத்த நற்சு முத்தி யிற்றன் றுய்க்கு மாயை கணடிடு,
மத்த மித்த லும்பி றத்த லும்மி லான பாவபா,
வத்தை விட்ட கண்ட மாய றிந்த போத டங்கவாம். 75

(இ-ள்) சித்தம் அத்தமித்த இடத்து-மந மானது நசித்த இடத்தில், அபாவமும் தெரிந்திடும் - (அதன்) அபாவத் தன்மையையும் அறிவான், சுத்த நல் சுழுத்தியில்-சுத்த மாகிய நல்ல சுழுத்தியினிடத்தில், துய்க்கும் மாயை கண்டிடும்-சோர் வுள்ள மாயைதனேயும் காண்பான், அத்தமித்தலும் பிறத்தலும் இலான்-ஒடுங்குதலும் ஜநித்தலும் இல்லாதவன், அபாவ பாவத்தை விட்டு-ஞாத அஞ்ஞாதத்தை விட்டு, அகண்டம் ஆய்-எல்லாவற்றையும், அறிந்த போது-உணர்ந்த காலத்து, அடங்க ஆம்-ஞாந ரூபனே யாவன் எ-று. 75

சந்தே 118 தாகப்ப டும்பொருள்.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் வீத

கவ்வியன் கதை 29 கவி.

தொடர்மந மேதென்னில், மெத்து மாகம பூடண
ருரைத்தது விசையுயி ரசைவாகும். 76

(இ-ள்) தொடர் மநம் ஏது என்னில்-(தொன்று) தொட்டு வராநின்ற மந மானது யாதென்ருல், மெத்தும் ஆகம பூடணர் உரைத்தது-மே லான வேதங்களேயே ஆபரண மாகக் கொண்டவர் கூறியது, விசை உயிர் அசைவு ஆகும்-விரை வான பிராண னின் சலந மாகும். எ-று. 76



சந்தே 127 நெய்யும் வெண்ணெயு.

வேதாந்த சூடாமணி திருசிய விவேகம் 93 கவி.

பிரமா நந்தமுறு மாயா விருத்தியெனு நுண்கரணந்
தன்ஞு, லநுபவித்தல் சுழுத்தியாம். 77

(இ-ள்) பிரம ஆநத்தம் உறும்-பிரமாநந்தத்தைப் பொருந்தும், மாயா விருத்தி எனும்-மாயா விருத்தியாகிய, நுண் கரணந் தன்ஞுல்-சூக்ஷுமமான கரண (அவித்தையின் சத்துவ) விருத்தியினுல், அநுபவித்தல் சுழுத்தி ஆம்-அநுபவித்துக் கொண்டிருத்தல் சுழுத்தி அஸ்தை யாம். எ-று. "பிரமாநந்தம்" என்பது, அகரம் குறுகி வந்தது. "நுண் கரணம் தன்ஞுல்" என்பதில், தன் அசை. 77

சந்தே 130 நிசமா னதுமுக்.

பிரம கீதை 11 அந்தியாயம் 17 கவி.

வாக்கது மநத்திடை வைக்கு மம்மநம்,
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே,
யாக்கிடு மந்தமா னிவைய ஊத்தினுந்,
தாக்கறுஞ் சாந் தமா தன்னிற் சாந்தமாம். 78

(இ-ள்) வாக்கது மநத்திடை வைக்கும்-வாக்கானது மநத்தினிடத்தில் ஒடுங்கும், அம் மநம் புந்தியுள் போக்கிடும்-அந்த மந மானது புத்தியினிடத்தில் ஒடுங்கும், புந்தி மானிலே ஆக்கிடும்-புத்தி யானது மக

தத்துவத்தில் ஒடுங்கும், அந்த மான் இவை யனைத்தினும்-அந்த மக தத்துவ மானது இவை எல்லாவற்றினும், தாக்க-அறும் சம்பந்த, மில்லாத, சாந்தம் ஆம் தன்னில்-சாந்த மாகிய ஆன்மா வான தன்னிடத்தில், சாந்தம் ஆம்-ஒடுங்கும், (எ-று) 78

சந்தே 132 எவனா கிலுமிந்த

**வாசிட்டம் 4 பிரகரணம் தாம வியாள கடர் கதை 12கவி.**

மநமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வாம்.

(இ-ள்) மநம் எனும் வினையை-மந மாகிய புயங்கத்தை, வென்றோர்-ஜயித்தவரது, மலர் அடி முடி மேல் கொள்வாம்-(தாமரை) மலர் போன்ற திருவடிகளை சிரசின் மீது (தரித்துக்) கொள்ளு வாம். (எ-று), 79

சந்தே 136 நித்தியம்பூ ரண.

**ஞாந வாசிட்டம் 4 பிரகரணம் தாம வியாள கடர் கதை 2 கவி.**

சீவனா யிருந்து காணுஞ் சிற்பர தத்து வத்தே,
மேவிய நந வை யுற்றோர். 80

(இ-ள்) சிவன் ஆய் இருந்து-சிவன் முத்த தசையில் (வாழ்ந்து கொண்டு) இருந்தே, காணும்-சுவ



சொரூப மாகக் காணத் தக்க, சிற் பர தத்துவத்தே-சிந்மய மே லான தத்துவத்தில், மேவிய நந வை யுற்றோர்-பொருந்திய ஜாக்கிரதை யடைந்துள்ள வரது. (எ-று). 80

ஷ

**ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் கற்கடி கதை 38 கவி.**

தடமான வதன்புறமில் லாமையினால் விண். 81

(இ-ள்) தடம் ஆன-விசாலமான, அதன் புறம்-அதன் பாகியம், இல்லாமையினால்-சூநிய மாதலின், விண்-ஆகாச மாகும். (எ-று). 81

சந்தே 136 நித்தியம்பூ ரண.

**ஞாந வசிட்டம் 5 பிரகரணம் ஜநகன் கதை 12 கவி.**

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தநவரத
முரைப்ப தாகி, நிகழொளியா யாந்மதத் துவமான
சொரூபத்தை நினைத்தல் செய்வாம். 82

(இ-ள்) அகம் அகம் என்று-அகம் அகம் என்ப தாக, அனைத்து உயிரினிடத்தும் இருந்து-சகல ஜீவர்களிடத்திலு மிருந்து, அநவரதம் உரைப்பது ஆகி-எப் போதும் இயம்புவ தாகி, நிகழ் ஒளி ஆய்-விளங்கா நின்ற பிரகாசமய மாயும், ஆந்ம தத்துவம் ஆனசொரூபத்தை-ஆந்ம தத்துவமு மான வடிவத்தை, நினைத்தல்

செய்வாம்-(நன்ருகத்) தியாநஞ் செய்வாம்.
(எ-று). 82

ஷி

பிரம கீதை 12 அத்தியாயம் 2 கவி.

உரையாடு கின்ற நானென்னு முரைக்கு மறிவுக்
கும்ம றிவாய், நாடு கின்ற உணர்வொன்றுண் ட துவே
யா ந்மா நமக்கெல்லாம். 83

(இ-ள்) உரையாடுகின்ற-சொல்லுகின்ற, நான் என்னும் உரைக்கும்-அக மென்னுஞ் சொல்லுக்கும்? அறிவுக்கும் அறிவு ஆய்-ஞாநத்திற்கும் ஞாந மாய், நாடுகின்ற உணர்வு ஒன்று உண்டு-கருதுகின்ற ஞாந சொருபம் ஒன்றிருக்கின்றது, அதுவே-அந்தப் பிரம சொருபமே, நமக்கு எல்லாம் ஆந்மா-நம் போலிகட் கெல்லாம் ஆந்மா வாகும். (எ-று). 83

சந்தே 136 நித்தியம்பூ ரண.

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் வேதாள கதை 24கவி.

சூக்க மாயெட் டாமையினற் சொன்ன பரமே பரமாணு. 84

இ-ள்) சூக்கம் ஆய் எட்டாமையினல்-சூக்கு மத் தன்மையாலே அடையமுடியாமையான், சொன்ன பரமே-கூறிய- பரம் பொருளே, பரம-அணு-பரம அணு வாம். (எ-று). 84



சந்தே 137 அசலநிரஞ் சந.

பிரம கீதை 6 அத்தியாயம் 6 கவி.

சுழலும்வினை நலனுமன் றியதுநரை மரணம்மு
பசியை முத, லுலகுறுந் துயர்முழுது முடையனன்
றெருபொழுதும்- 85

(இ-ள்) சுழலும் வினை நலனும்-சுழற்றுகின்ற நல்வினையும், அன்றியதும்-தீவினையும், நரை மரணமும்-நரையும் மரணமும், பசியை முதல்-பசி முதலாகிய, உல குறும் துயர் முழுதும்-உலகம் அடையப்பட்ட துன்பங்கள் முழுதும், ஒரு பொழுதும் உடையன் அன்று-ஒரு காலத்தும் உடையவ னல்ல. (எ-று). 85

ஷி

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிலைக் கதை 4 கவி

நிலன்விண் கால்கிரி திசையெலா மேவியு நெடுஞ்
சிலை புரை யாகா, 86

(இ-ள்) நிலன் விண் கால் கிரி திசை-பூமி ஆகாயம் காற்று பர்வதம் திக்கு, எலாம் மேவியும்-(என்னும் இவை) யாவும் பொருந்தியும், நெடுஞ் சிலை-பெரிய சிலையானது, புரை ஆகா-பொருந்துருது (எ-று). 86

சந்தே 137 அசல நிரஞ் சந.

பகவத் கீதை 2 அத்தியாயம் 23 கவி.

ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந் துளவாதல்,
வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்ருய் விளைந்தமைதல்,
மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற,
வாறியல்பு முடம்பன்றி யறிவடையா. 87

(இ-ள்) ஊறுபட-(அநேக விதமான) இடையூறுகளைப் பொருந்த, ஒன்றின் உளே பிறத்தல்-ஒரு உதரத்திலே ஜநநமாதல், பிறந்து உள ஆதல்-உற்பந்நமாகியிருத்தல், வேறுபட வளர்தல்-(அதற்கு வேருக விருத்தியாதல், வளர்ந்து அயல் ஒன்றுஆய்-விருத்தியாய் (அதற்கு) வேருன ஒரு விகாரமாக, விளைந்து அமைதல்-பரிணமம் ஆதல், மாறுபடத் தேய்தல்-(அதற்கு) முரணுக இளைத்தல், அற மாய்தல் என வருகின்ற-மிகவும் விநாசமாதல் என்று சொல்லும்படி வாராநின்ற, ஆறு இயல்பும்-சட் பாவ விகாரங்களும், உடம்பு அன்றி-சரீரத்தை யடையுமல்லாமல், அறிவு அடையா-ஆந்மாவை அடையாவாம். (எ-று). 87

சந்தே 139 நிர்க்குணவத்.

ஞாந வாசிட்டம் 3 பிரகரணம் ஞாந விண் மகன் கதை 7 கவி.

சத்தியம் பிரம மாந்மா பரமுதற் சாற்ற வேண்டி.
யித்திறப் பெயர்மே லோரா லிடப்பெற்ற விந்த வாந்மா. 88



(இ-ள்) சத்தியம்-உண்மை, பிரமம்-(பெரிதினும்) பெரிது, ஆந்மா-சொருபம், பரம் முதல்-உயர்ந்தது ஆதியவாக, சாற்ற வேண்டி - விவகரிக்கும் பொருட்டு, இத் திறப் பெயர்-இத் தன்மையன வாய நாமங்கள், மேலோரால்-மகான்களால், இடப்பெற்ற-வைக்கப்பட்ட, இந்த ஆந்மா-இப் பிரமம். (எ-று). 88

சந்தே 139 நிர்க்குணவத்.

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் சுரகு கதை 16 கவி.

எல்லாமென் றுரைத்த தெலா மறிவித்தற்
பொருட்டேயா மிசையச் சொன்ன, சொல்லாலென்
வீணன்றே யாதலினு லோமென்று துணிக வித்தை. 89

(இ-ள்) எல்லாம் என்று உரைத்தது எலாம்-யாவுமென்று கூறிய வெவையும், அறிவித்தற் பொருட்டே ஆம்-உணர்த்தி வைத்தற் பொருட்டே யாம், இசையச் சொன்ன சொல்லால் என்-பொருந்தப் புகன்ற மொழியாலென்னே, வீண் அன்றே-வீ ணல்லவே, ஆதலினுல் ஆகையினுல், ஓம் என்று துணிக இத்தை-ஓம் என்று நிச்சயித்துக் கொள்ளுக இதனை. (எ-று). 89

சந்தே 143 சுருதியுத்தி.

ஞாந வாசிட்டம் 4 பிரகரணம் தாசூரன் கதை 102 கவி.

பரமமா யுண்டெனல் வடிவாய், மின்னிய
சமமா மறிவுகாண் பவற்றின் மேவுற வெழுதல்
சங் கற்பம். 90

(இ-ள்) பரமம் ஆய் உண்டு எனல் வடிவு ஆய் அநந்த ஆத்ம தத்துவ மாய், சத்தா சாமாநிய ரூபி யாய், மின்னிய-விளங்காநின்ற, சமம் ஆம் அறிவு-எங்கும் விளக்கந் தரும் சித்தானது, காண்பவற்றின்-திருசிய, மேவுற எழுதல்-நன்னுட்டம் நண்ணுதலே, சங்கற்பம்-(சங்கற்ப) அங்குரம் என்பர். (எ று) 90

சந்தே 144 சுருதியுத்தி

### ஞானவாசிட்டம் 4 பிரகரணம் தாரூரன் கதை 10 கவி

அறிவெனும் விதைசங் கற்பமா முளையாம். 91

(இ-ள்) அறிவு எனும் விதை-சித் தாகிய பீஜம், சங்கற்பம் ஆம் முளை ஆம்-சங்கற்ப மாகிய அங்குரமாம். எ-று 91.

சந்தே 144 பலகலையு

### ஞான வாசிட்டம் 4 பிரகரணம் கசன் கதை 19 கவி

கசனுயர் சமாதி நீங்கி யொருபகற் களிக்கு நெஞ்சன்,
வசமறத் தழுத முத்த வசநத்தன் யாது செய்கேன்,
றிசையுற வெங்கு செல்கேன் றீர்ப்பதென் கொள்வ,
தென்னு, மிசையுயர் கற்ப் நீர்போல் மேதினி
யெங்கு நானே 92



(இ-ள்) கசன்-தேவ குரு சுதன், உயர் சமாதி நீங்கி-மேன்மை தங்கிய நிர்விகற்ப சமாதியினின்றுங் கிளம்பி, ஒரு பகல்-ஒரு போது, களிக்கும் நெஞ்சன்-மகிழ்ச்சி யுடைய மநத்தனுய், வசம் அற-பரவசனுய், தழு தழுத்த வசநத்தன்-சத் கத ஸ்வர முடையவனுய், யாது செய்கேன் - எதனை யியற்றுவேன், திசையுற எங்கு செல்கேன்-எத் திசையை நோக்கி யாண்டு செல்லுவேன், என் கொள்வது தீர்ப்பது என்னு-எதனைக் கவர்வேன், எதனைத் தியாகிப்பேன், மிசை உயர்-மேலும் கீழும் எங்கும் தங்கும், கற்ப நீர் போல்-மகா கற்ப ஜலம் போல, மேதினி எங்கும் நானே-உலகம் முழுவதும் யானே (வியாபித்துள்ளேன்.) (எ-று). 92

சந்தே 144 பல கலையு.

### ஞான வாசிட்டம் 4 பிரகரணம் கசன் கதை 20 கவி.

மேனியிற் புறத்தி னுள்ளின்
மேலொடு கீழில் திக்கில்,
வானில்வை யகத்தி லெங்கு
நானன்றி மற்ருென் றில்லை,
யானிலா விடமு மில்லை
யெனதிடத் திலாது மில்லை,
தானிகழ் பொருள்வே றில்லைச்
சச்சிதா நந்த மென்ருன் 93

(இ-ள்) மேனியில்–தேகத்தில், புறத்தில்–பாகியத் திலும், உள்ளில் – ஆந்தரத்திலும், மேலொடு கீழில் திக்கில் – ஊர்த்துவ அதோ பாகங்களிலும், திசைகள் (எட்டிலும்), வானில் வையகத்தில் – ஆகாயத்திலும் பூமியிலும், எங்கும்–பிறவிடங்களிலும், நான் அன்றி– ஆத்மா வல்லது, மற்று ஒன்று மில்லை–பிறி தொன்றுமே கிடையாது, யான் இலா இடமும் இல்லை–நா னில்லாத இடமே இல்லை, எனது இடத்து இலாதும் இல்லை– என்னிடத்து (யாவும் தோற்றலின்) இல்லாத தொன்றுமே இல்லை, தான் நிகழ் பொருள் வேறு இல்லை–தன்னைப் பார்க்கிலும் அந்நிய வஸ்து (ஒன்றுமே) இல்லை, சச்சிதாநந்தம் என்றான்–(சர்வமும்) சிந்மய மாகவே இருக்கின்றது என்று (தனது பரமாநந்த அநுபூதியை) யுரைத்தான். எ–று. 93

சந்தே 144 பல கலையு.

**தத்துவ ராயர் பாடு துறை 70 வாழ்க்கைப் பாடு 1 கவி.**

தன்னிலே யெல்லாமி ருக்குமாகிற்
றனெல்லாத் துள்ளுமி ருப்பனாகில்,
பின்னிலன் முன்னில னவனாகிற்
பெரிதுமு டிந்ததென் வாழ்க்கைப்பாடே. 94

(இ-ள்) தன்னிலே-ஆத்மாவினிடத்திலே, எல்லாம் இருக்கும் ஆகில்-யாவும் இருக்குமானால், தான்-(ஆந்மா வான) தான், எல்லாத்து உள்ளும் இருப்பன் ஆகில்– எல்லாவிடத்தும் இருப்பானே யானால், பின் னிலன் முன் னிலன்-ஜநந மரணம் சகல கேவலங்க ளற்று பரோக்ஷ அபரோக்ஷ மன்றி, ஆவன் ஆகில்-இருப்பனாகில், என் வாழ்க்கைப்பாடு – எனது வாழ்க்கைப் பாடானது. பெரிதும் முடிந்தது-பெரும்பாலும் முடிவுற்ற தாம். எ-று. ஏ அசை. 94



சந்தே 153 துரியநிலந் தனை.

**பிரம கீதை 5 அத்தியாயம் 136 கவி.**

யாவ னொருவன் றனையிழந்தே
யளவில் வேறு படக்கண்டு,
யாவ னொருசொல் வேறுபடக்
கேட்டு மறிந்தும் வருகின்றான்,
யாவ னொருவன் றனக்கென்றுஞ்
சிறுமை யதுவே பிறப்பிறப்புப்,
போவ தில்லாக் காரணமு
மதுவே யென்று புகன்றனனால். 95

(இ-ள்) யாவன் ஒருவன்–எவனொருவன், தனை இழந்தே-(தானாகிய) பிரமத்தை யுதாசீநம் பண்ணி, அளவில் வேறுபடக் கண்டும்-அள வில்லாத பிந்ந பிந்நங்க ளாகப் பார்த்தும், யாவன் ஒரு சொல்-எவன் ஒரு சொல்லாயினும், வேறுபடக் கேட்டும் அறிந்தும்- பிந்ந மாகக் கேட்டும் (அப்படியே) அறிந்தும், வருகின்றான் யாவன்–வருகின்றவன் எவனோ. ஒருவன் தனக்கு – (அந்த) ஒருவனுக்கு. என்றும் அதுவே சிறுமை-எக் காலத்தும் அதுவே சிறுமை யாகும், பிறப்பு இறப்பு–சநந மரணமும், போவது இல்லாக்

காரணமும்-நீங்காத காரணமும், அதுவே என்று புகன்றனன்-அதுவே தா னென்று (பிரம தேவன்) சொன்னான். எ-று.

ஆல் அசை. "ஒருவன் றனக்கு" என்பதில், தன் அசை 95

சந்தே 153 துரியநிலந் தனை.

பிரம கீதை 5 அத்தியாயம் 137 கவி.

அருளினா லியாவன் றன்க
ணிவையில்வே றென்று காணு,
தருளினால் வேறு கேளா
தறிந்திடா திருக்கி லஃதே,
யருளதாம் பெருமை தானு
மழிந்திடாச் சுகமு மெல்லா,
விருளிலா விடு தானு
மென்றன னிமையோர்க் கெல்லாம் 96

(இ-ள்) அருளினால்-(பரமேசுர) கிருபையினால் யாவன் தன்கண்-எவன் ஆன்மாவி னிடத்தில், இவையில் வேறு ஒன்று காணாது-இவைகளில் வேறொன்றையும் காணாமலும், அருளினால்-(அந்தக்) கிருபையினால் வேறு கேளாது-வேறொன்றையும் கேளாமலும், அறிந்திடாது இருக்கில்-அறிந்திடாமலும் இருந்தால், அஃதே-அதுவே, அருளது ஆம் பெருமைதானும்-சிவப்பிரசாத மென்னும் பெருமையும், அழிந்திடாச் சுகமும்-நாச மில்லாத வின்பமும், எல்லா விருள் இலா வீடு தானும்-சர்வ அஞ்ஞான மில்லாத மோக்ஷமும், என் இமையோர்க்கு எல்லாம்-தேவர்கட் கெல்லாம், என்றனன்-என்று (பிரம தேவர்) திருவாய் மலர்ந்தருளினார். எ-று.



"தானும்" "தானும்" என்பவற்றில், தான் தான் அசை 96

சந்தே 155 நாலாம் பூமியில்

ஞான வாசிட்டம் 6 பிரகரணம் இதோபதேசம் 9 கவி.

எரியுங் கடலி னுகத்துளையி,
லாமை கழுத்துப் புகுவதுபோற்,
பொறிவெம் பிறவி யநேகத்தாற்
புருடன் விவேகி யெனப்பிறந்து.

(இ-ள்) எரியும் கடலில்-(மிகுந்த) அலைகளை வீசுகின்ற சமுத்திரத்தில், நுகத் துளையில் - நுகத்தடி துவாரத்தில், ஆமைக் கழுத்துப் புகுவது போல்-ஆமையி னுடைய கழுத்து நுழைவது போல, பொறி வெம் பிறவி அநேகத்தால்-துன்பந் தரும் அநேக ஜன்மம் கழிந்த பின்னர், புருடன் விவேகி எனப் பிறந்து-அதிகாரி யானவன் விவேகி என்று சொல்லும்படி யாக ஜனித்து. எ-று. 97

ஷ

ஞான வாசிட்டம் 6 பிரகரணம் இதோபதேசம் 28 கவி.

மறுபூ மிக்கிந்த வொன்றே சநந
பூமியென, முடிவில் வெளியாம். 98

(இ-ள்) மறு பூமிக்கு-மற்றைய பூமிதனக்கு, இந்த ஒன்றே-இது ஒன்று தானே, சநந பூமி என-ஜெநந பூமி என்று, முடிவில் வெளி ஆம்-ஈற்றில் நன்ருகத் தெரியும். எ-று. 98

சந்தே 162 சிஞ்ஞாசு ஞாநவான்

சொரூபாநந்த உபநிடதம் 30 கவி

மாருத வஞ்ஞா ந முழுதுமகல் வதுகூறின்.

(இ-ள்) மாருத அஞ்ஞாநம்-(ஆந்ம ஞாநத்தாலன்றி) நாச மாகாத அஞ்ஞாநம், முழுதும் அகல்வது கூறின்-முழுதும் நாச மடைவதைச் சொல்லுமிடத்து எ-று. 99

சந்தே 163 பந்தமனே துறந்து

பகவற் கீதை 3-12

காதலா லரசன் சநகனே முதவோர் கருமமோ
டொமுகியே யன்றே, போதரா யுலகம் புக்கது. 99

சந்தே 169 வாதனு வசத்தி

ஞாந வாசிட்டம் 5 பிரகரணம் மாவலி கதை 31 கவி

அந்த மந்திரி யந்தவேந்தா,
லெளிது வென்றிடில் வணங்குறும். 100



(இ-ள்) அந்த மந்திரி-அந்த (மந மாகிய) மந்திரியினை, அந்த வேந்தால்-அந்த (விவேக மாகிய) அரசனுல், எளிது வென்றிடில்-சுலபமாக ஜெயஞ் செய்யில், வணங்குறும்-கீழ் படிந்து நிற்கும். எ-று. 100

சந்தே 170 விருத்திக ளடக்க

ஞாந வாசிட்டம் 6 பிரகரணம் சிகித்துவசன் கதை 95 கவி

உலகமெலாம் பிரம்மமெனும் பாவனையா
லஞ்ஞாந மொழிந்து போனுன். 101
மலமுறுவா தனைதோன்ரு.

(இ-ள்) உலகம் எலாம்-ஜகத்து முழுதும், பிரமம் எனும் பாவனையால்-சிவரூப மெனும் பாவனையினுலே, அஞ்ஞாநம் – அறியாமை யானது, ஒழிந்து போனுல்--அழிந்து போகு மாயின், மலம் உறு வாதனை தோன்ரு-(மேலும் மேலும்) ஜந்மத்தைக் கொடுப்பதான வாசனை தோன்ற மாட்டாது. எ-று. 101

சந்தே 176 தத்துவ ஞாநம்

பிரம கீதை 12 அத்தியராயம் 20 கவி.

இந்தவி டும்பையு டம்புறு மேது,
தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோ,
ரந்தமி லாதவ கணடமு நம்முட், 102
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்ருர்.

(இ-ள்) தக்கோர் - பெரியோர்கள், இந்த இடும்பை-இந்தத் துன்ப மாகிய, உடம் புறும் ஏது-சரீரம் உண்டாதற்குக் காரண மாகிய (பிதாவை), தந்தை என புகழ்கின்றிலர்-பிதா வாகிய (குரு) என்று புகழ மாட்டார்கள், அந்தம் இலாத அகண்டமும்-முடிவில் லாத ஆத்ம சொருபத்தை, நம் உள்-நமது இருதயத்தின் கண்ணே, தந்தவர்-(உபதேச வாயி லாக) விளங்கும்படி, அநுக்கிரகஞ் செய்தவரை, தந்தை என-பிதா வாகிய (குரு) வென்று, சமைவுற்ருர் -(புகழும்படி) பொருந்தி யுள்ளார். எ-று. 102

சந்தே 176 தத்துவ ஞாநம்

**ரிபு கீதை 1 கவி (1) பெருந் திரட்டு**

தந்தை தாயுமெய்த் தகவுடை யுறவும் 103

(இ-ள்) தந்தை - பிதாவும், தாயும் - மாதாவும், மெய்-உண்மை யான, தகவு உடை-தகுதி யான, உறவும்-சுற்றமும் (குரு மூர்த்தியின் திரு வடியே ஆம்). எ-று. 103

சந்தே 163 பந்தமனே துறந்து

**பகவத் கீதை 3 அத்தியாயம் 12 கவி**

காதலா லரசன் சநகனே முதலோர் கருமமோ
டொழுகியே யன்ருே, போதரா யுலகம் புக்கது. 104



(இ-ள்) அரசன் சநகனே முதலோர்-அரச ஞகிய ஜநகன் (அஜாத சத்ரு, பகீரதன்) முதலானேர், காத லால்-சிரத்தையினுல், கருமமோடு ஒழுகியே அன்ருே-கர்மா நுஷ்டாநங்களோடு கூடி நடந்தே யல்லவா, போதர் ஆய் உலகம் புக்கது-(அந்தக் கரண சுத்தி வாயி லால்) ஞாந நிஷ்டராய் (மோக்ஷ) உலகிற் புக்கது. 104

2 வது சந்தேகந் தெளிதற் படலம்
உதாரணக் கவியும், ஆதித்தன் உரையும்,
முற்றுப் பெற்றது. ஆகக் கவி. 233.

கைவல்ய நவநீத உதாரணக் கவியும்,
ஆதித்தன் உரையும்
முற்றுப் பெற்றது.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 12 | உற்பத்தி | உற்பத்திப் |
| 5 | 9 | முட்டிய | மூட்டிய |
| 6 | 2 | கொனற்கு | கொளற்கு |
| 6 | 18 | விஷ்னு | விஷ்ணு |
| 7 | 4 | சென்ன | சொன்ன |
| 8 | 13 | மகர்மலும் | மரகாமலும் |
| 8 | 15 | ஆ அ | ஆ ஆ |
| 10 | 3 | னெஞ்சிளி | ணெஞ்சினி |
| 10 | 18 | வின் | விங் |
| 11 | 19 | வினுனின்ற | வினுணின்ற |
| 12 | 2 | அரன் | அரன்–சிவன் |
| 12 | 3 | ளாகிய | ளாகிய இவரை |
| 17 | 11 | செல்லத் | சொல்லத் |
| 17 | 13 | குமரா | குமார |
| 18 | 5 | விள்ங்கும் | விளங்கும் |
| 18 | 22 | யோவ் | போல் |
| 19 | 15 | நண்பணு | நண்பனு |
| 20 | 8 | யபிமானே | யபிமானமே |
| 21 | 4 | சீதன | சீதள |
| 21 | 11 | மநந்தா | மநத்தா |
| 21 | 13 | வேரடி | வோடி |
| 22 | 8 | உருவும் | உருவம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 22 | 23 | விகரத்தால் | விகாரத்தால் |
| 23 | 9 | பிாகரணம் | பிரகரணம் |
| 26 | 12 | பிள்னற் | பின்னற் |
| 28 | 23 | ளிரண்டுல் | ளிரண்டும் |
| 29 | 14 | ஞாநேந்திரயங்கள் | ஞாநேந்திரியங்கள் |
| 29 | 17 | ஐந்தும | ஐந்தும் |
| 31 | 17 | வேறு | வேரு |
| 31 | 23 | சிரியும் | கிரியும் |
| 32 | 8 | ளந்தினேயு | ஊந்தினேயு |
| 33 | 18 | பகுமட | பகுமுட |
| 34 | 21 | திரம | திரம் |
| 35 | 4 | மாததிரம் | மாத்திரம் |
| 36 | 8 | செல்லும் | சொல்லும் |
| 36 | 24 | குகனு | குசனு |
| 37 | 17 | நூடண | தூடண |
| 38 | 11 | யுயிர் | யுயிர்காணு |
| 38 | 16 | நிதம் | திதம் |
| 40 | 9 | தேரணி | தோணி |
| 40 | 18 | செலுத்த | செலுத்து |
| 41 | 9 | துயலின் | துயிலின் |
| 41 | 10 | போ | போவ |
| 42 | 13 | அக்நியும | அக்கிநியும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 43 | 3 | உறைத்த | உறைந்த |
| 43 | 3 | வன் | வண் |
| 43 | 3 | டெகுத்த | டெடுத்த |
| 44 | 19 | மாயைதஊ | மாயைதனே |
| 46 | 14 | மிகுத்த | மிருந்த |
| 52 | 1 | ஓழி | ஒலி |
| 53 | 14 | லயர்தகு | லயர்தரு |
| 53 | 19 | ஸ்மிருகியாம் | ஸ்மிருதியாம் |
| 61 | 2 | தெடர்ந்து | தொடர்ந்து |
| 63 | 2 | கற் ங்க | கற்பங்க |
| 63 | 19 | ஞாந வாசிட்டம் | ஞாந வாசிட்டம் |
| | | வாசிட்டம் | ,, |
| 83 | 10 | 101 | 110 |
| 83 | 26 | 101 | 110 |
| 83 | 27 | 114 | 110 |
| 93 | 6 | புகல்வவ | புகல்வ |
| 126 | 18 | ஆசு இலா ஆசிலா | ஆசு இலா |
| 126 | 21 | ஏவர்'ஒப்பார்'ஏன்' | ஏன் |
| 135 | 13 | சிந்து | சித்து |
| 137 | 11 | மந்த | மந்தா |

11. கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீப உரை [உதாரணக் கவி 233க்கு ஆதித்தன் உரை. 2—50
12. வேதாந்த சூடாமணி–சந்தோஷ தாயினி உரை. 4—00

## இயற்றிய நூல்

1. சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி பரிமள தீப உரை. 1-50
2. சூட்டுக் கோல, கட்டாரி புச்சம், கண்டநம் 1—00
3. திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, [மணி மாலை சிறு சுடர் உரை. 0—75
4. சப்ததா சப்ததி: ஸ்தோத்திர ரச மஞ்சரி. [நுந்தா ஒளி உரை 0—50
5. விம்சதி ஸ்தோத்ர ரச மஞ்சரி நுந்தா ஒளி உரை 0—25
6. மந்திர உபதேசம் வசநம். 0—25
7. திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி நுந்தா ஒளி உரை. 0—25
8. வட நாட்டில், ஹரித்வார கும்ப மேளாவும், வசநம் 0—25
[தென் ஞட்டில், சாதுக்கள் மேளாவும், வசநம் 0—25
9. சாது சங்க நிறுவல் விழா வைபவம்-வசநம்.
10. மடங்களின் உத்பத்தியும், தற்போதுள்ள நிலைமையும். 0-13
11. அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், [அத்வைதிகட்கும், ஓர் அறிக்கை. 0—25
12. திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, பத உரை. 0—25

ஆக நூல் (37—26) 63

## பிற நூல் அச்சிட்டன.

1. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9 சேர்ந்தது. [கவி 1132 3—00
2. வோதந்த சாஸ்திர ரத்நத் திரயம் 3 சேர்ந்தது. விவேக சூடா மணி கவி 671 அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி 796) ஆக 1961 கவி 3—00
3. கீதாத் திரயம். பகவற் கீதை கவி 545 ஈசுவர கீதை கவி 338 பிரஹ்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்து கவி 1430 3—00
1—00
4. திருக் களர், வீரசேகர ஞாந தேசிக சரிதம்-வசநம். 2—25
5. வாசிட்டம் கவி 2055. 0—38
6. பிரஹ்ம கீதை கவி 547. 1—25
7. பகவற் கீதை கவி 545. 0—25
8. ஈசுவர கீதை கவி 338. 0—63
9. பஞ்ச தசி கவி 796.

10. பக்தி சதக தோத்திரம், தோத்ர பிரகாச உரை. 0—19
11. கைவல்ய நவநீதம் கவி 288. 0—56
12. ஒன்பது துறவியர் பாடிய அருட் பா மாலை 1—00
13. கைவல்ய நவநீதம், கவி 288
ஸ்ரீ அருணசல ஞான தேசிகர் பத சார உரை. 3—00
14. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி. கவி (62) 0—50
15. காசிகாநந்த விஜயம், வசநம். 0—25

## அச் சாக வேண்டியன. 28

1. யுக்தி பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு. வசநம்.

## சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

2. பேத திக்காரம்—சத் கிரியை உரை. வசநம்.
3. விவேக சூடாமணி (வேதாந்தம்) பத உரை.
4. பிரபோத சுதாகரம், பத உரை-வேதாந்தம்.
5. சித்தாந்த லேச சார சங்கிரகம் 56 மத விசாரம்.
6. தர்க்க சங்கிரகம் தீபிகை உரையுடன் (தர்க்கம்.)
7. காணுத சித்தாந்த சந்திரிகை. வசநம் (தர்க்கம்).
8. சப்த பதார்த்தீ. வசநம் (தர்க்கம்).
9. லௌகிக நியாய சங்கிரகம் 400 நியாயம். வசநம்.
10. கணேச கவசம் பத உரை 11. ஷை தமிழ்க் கவி உரை.
12. சிவ சங்கராவதாரம் சுவோகம் உரை.
13. ஸ்திரி புருஷ ஜநந மரண ரஹஸ்யம்-வசநம்.
14. மகாத்ம சரிதாமிருதம்-வசநம்.
15. ஈசுவர கீதை ரஹஸ்யார்த்த விளக்க உரை.
16. கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம்-வசநம்,
17. தாயும், தநயனும். வேதாந்தம் வசநம்.
18. கட்கம் கொண்ட காளியை ஜயிக்கும் காமாரி-வசநம்.
(சோம சுந்தர மாலைக்கு கண்டநம்.)
19. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும்,
[சக்தி விவேசநமும்.
20. பட்டிநத்தார் பாடல் உரை.
21. பல கேள்வி சமாதாந லட்டர்கள். 22. சமாதி விதி.
23. உண்மைக் கடவுள் வசநம். 24. சந்யாச விதி.
25. சங்கர விஜய விலாசம்-வசநம்.
26. கைவல்ய நவநீதம்-கிருத பாந உரையும், 27. ஆராய்ச்சியு
28. சதுர்த் தச வித்யாப் பிரகாசிகை-வசநம்.

---